சிவமயம்

# திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப் பதிகங்கள்

---

## ஐந்தாந் திருமுறை

### கோயில் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே. ௧

அரும்பற் றப்பட ஆயமலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே ௨

அரிச்சுற் றவினை யாலடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. ௩

அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. ௪

ஊனில் ஆவி யுயிர்க்கும் பொழுதெலாம்
நான் நிலாவி யிருப்பனென் னாதனைத்
தேன் நிலாவிய சிற்றம் பலவனார்
வான் நிலாவி யிருக்கவும் வைப்பரே. ௫

சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. ௬

ஒருத்த னார்உல கங்கட் கொருசுடர்
திருத்த னார்தில்லைச் சிற்றம் பலவனார்
விருத்த னாரிளை யார்விட முண்டவெம்
அருத்த னாரடி யாரை யறிவரே. ௭

விண்ணி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு
எண்ணி றைந்த இருவர்க் கறிவொணாக்
கண்ணி றைந்த கடிபொழி லம்பலத்
துண்ணி றைந்துநின் றாடு மொருவனே. ௮

வில்லை வட்டப் படவாங்கி யவுணர்தம்
வல்லைவட் டம்மதில் மூன்றுடன் மாய்த்தவன்
தில்லைவட் டந்திசை கைதொழு வார்வினை
ஒல்லைவட் டங்கடந் தோடுத லுண்மையே. ௯

நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் நெஞ்சு ளிருக்கவே. ௰

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் திருமலை
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## கோயில் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே. க

தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனே. உ

கட்டும் பாம்புங் கபாலங்கை மானமறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை யம்பலக் கூத்தனை
என்த னைப்பொழு தும்மறந் துய்வனே. ௩

மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவென்
ஆணியைச் செம்பொ னம்பலத் துள்நின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனே. ௪

பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்த னைச்செம்பொ னம்பலத் துள்நின்ற
அத்த னையடி யேன்மறந் துய்வனே. ௫

நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கும் அறிவொண்ணாச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனி னம்பலத்
தாதி யையடி யேன்மறந் துய்வனே. ௬

மைகொள் கண்டனெண் தோளன்முக் கண்ணினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனார்
செய்ய மாதுறை சிற்றம்ப லத்தெங்கள்
ஐய னையடி யேன்மறந் துய்வனே. ௭

முழுதும் வானுல கததுள தேவாகள்
தொழுதும் போறறியுந் தூயசெம் பொனனினால்
எழுதி மேய்நதசிற றம்பலக் கூததனை
இழுதை யேனமறந் தெஙஙன முய்வனே. அ

காரு லாமலாக் கொனறையந் தாரனை
வாரு லாமுலை மஙகைம ணாளனைத்
தேரு லாவிய தில்லையுட் கூத்தனை
ஆர்கி லாஅமு தைமறந் துய்வனே. கூ

ஓங்கு மாலவரை யேநதலுற றானசிரம்
வீங்கி விம்முற வூனறிய தாளினன
தேங்கு நீாவயல் சூழ்தில்லைக கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேனமறந் துய்வனே. க0

திருச்சிறறமபலம்

---

## திருநெல்வாயில் அரத்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிறறம்பலம்

கடவு ளைககட லுளெழு நஞசுண்ட
உடலு ளானையொப பாரியி லாதவெம
அடலு ளானை யாததுறை மேவிய
சுடரு ளானைககண் டாநாந் தொழுவதே. க

கரும்பொப பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோருமு அறிகிலா
அரும்பொப் பானை யாததுறை மேவிய
சுரும்பொப் பானைககண் டாநாந் தொழுவதே. உ

ஏறொப் பானையெல் லாவுயிாக் குமமிறை
வேறொப் பானைவிண் ணோரும் அறிகிலா
ஆறொப் பானை யாத்துறை மேவிய
ஊறொப் பானைககண் டாநாந் தொழுவதே. ௩

பரப்பொப் பானைப பகலிருள நன்னிலா
இரப்பொப் பானை யிளமதி சூடிய

அரப்பொப் பானை யாத்துறை மேவிய
சுரப்பொப் பானைக்கண் டாநாந் தொழுவதே. ச

நெய்யொப் பானைநெய் யிற்சுடா போல்வதோா
மெய்யொப் பானைவிண் ணோரு மறிகிலா
ஐயொப் பானை யாத்துறை மேவிய
கையொப் பானைககண் டாநாந் தொழுவதே. ரு

நிதியொப் பானை நிதியிற் கிழவனை
விதியொப் பானைவிண் ணோரு மறிகிலா
அதியொப் பானை யாத்துறை மேவிய
கதியொப் பானைக்கண் டாநாந் தொழுவதே. சு

புனலொப் பானைப் பொருந்தலா தம்மையே
மினலொப் பானைவிண் ணோரு மறிகிலா
அனலொப் பானை யாத்துறை மேவிய
கனலொப் பானைககண் டாநாந் தொழுவதே எ

பொனனொப பானைப்பொன னிறசுடா போல்வதோர்
மினனொப பானைவிண ணோரு மறிகிலா
அனனொப் பானை யாதத்துறை மேவிய
தனனொப் பானைக்கண் டாநாந் தொழுவதே. அ

காழி யானைக் கனவிடை யூருமெய்
வாழி யானைவல் லோருமென றினனவா
ஆழி யானபிர மற்கும ரத்துறை
ஊழி யானைககண் டாநாந் தொழுவதே. கூ

கலையொப் பானைக கறறாக்கோ ரழுதினை
மலையொப பானை மணிமுடி யூனறிய
அலையொப் பானை யாதத்துறை மேவிய
நிலையொப் பானைககண டாநாந தொழுவதே. க0

திருச்சிற்றமபலம

---

## திருஅண்ணாமலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணா மலையனை
இட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன்மறந் துய்வனோ. க

வான னைம்மதி சூடிய மைந்தனைத்
தேன னைத்திரு வண்ணா மலையனை
ஏன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆன னையடி யேன்மறந் துய்வனோ. உ

மத்த னைம்மத யானையு ரித்தவெஞ்
சித்த னைத்திரு வண்ணா மலையனை
முத்த னைம்முனிந் தார்புர மூன்றெய்த
அத்த னையடி யேன்மறந் துய்வனோ. ௩

காற்ற னைக்கலக் கும்வினை போயறத்
தேற்ற னைத்திரு வண்ணா மலையனைக்
கூற்ற னைக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்ற னையடி யேன்மறந் துய்வனோ. ௪

மின்ன னைவினை தீர்த்தெனை ஆட்கொண்ட
தென்ன னைத்திரு வண்ணா மலையனை
என்ன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்ன னையடி யேன்மறந் துய்வனோ. ௫

மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெகுண் டார்புர மூன்றையுங்
கொன்ற னைக்கொடி யேன்மறந் துய்வனோ. ௬

வீர னைவிட முண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னையுண ரார்புர மூன்றெய்த
ஆர னையடி யேன்மறந் துய்வனோ. ௭

கருவி னைககடல் வாய்விட முண்டவெம
திருவி னைததிரு வண்ணா மலையினை
உருவி னையுண ராாபுர மூனறெயத
அருவி னையடி யேனமறந் துயவனே. அ

அருத்த னையரா வைந்தலை நாகததைத்
திருதத னைத்திரு வண்ணா மலையினைக்
கருத்த னைககடி யாாபுர மூனறெயத
அருத்த னையடி யேன மறந துய்வனே. க

அரக்க னையல றவவிர லூனறிய
திருத்த னைத்திரு வண்ணா மலையினை
இரகக மாயென உடலுறு நோய்களைத
துரகக னைத்தொண்ட னேனமறந் துய்வனே. கo

திருச்சிறறமபலம்

## திருஅண்ணாமலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

பட்டி ஏறுகந் தேறிப பலஇ(ல்)லம்
இட்ட மாக இரந்துண் டுழிதரும
அட்ட மூாததியண் ணாமலை கைதொழுக
கெட்டுப் போம்வினை கேடிலலை காணமினே. க

பெற்ற மேறுவர் பெய்பலிக் கெனறவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடுமே
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. உ

பல்லி லோடுகை யேந்திப் பலஇ(ல்)லம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவா
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே. ௩

பாடிச் செனறு பலிக்கெனறு நின்றவர்
ஓடிப் போயினா செய்வதொன றெனகொலோ

ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போகுநம் மேலை வினைகளே. ௪

தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்
நாடி வந்தவா நம்மையு மாட்கொள்வா
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போமநம துள்ள வினைகளே. ௫

கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ணநன் காகுமே. ௬

கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனார்
ஆணிப் பொன்னினண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. ௭

கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. ௮

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யானற னண்ணாமலை
சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. ௯

மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையும் நீர்மையுள நின்றருள் செய்தவன்
உறையும் மாண்பினண் ணாமலை கைதொழப்
பறையும் நாஞ்செய்த பாவங்க ளானவே. ௰

திருச்சிற்றம்பலம்.

# திருஆரூர் - திருக்குறுந்தொகை

## திருச்சிற்றம்பலம்

எப்போ தும்மிறை யும்மற வாதுநீர்
முப்போ தும்பிர மனதொழ நின்றவன
செப்போ தும்பொனின மேனிச் சிவனவன
அப்போ தைதககஞச லெனனுமா ரூரனே. க

சடையின மேலுமொர் தையலை வைத்தவர்
அடைகி லாஅர வைஅரை யாரத்தவா
படையின னோதடங் கண்ணுமை பாகமா
அடைவா போலிடு காடரா ரூரரே. உ

விண்ட வெண்டலை யேகல னுகவே
கொணட கம்பலி தேருங் குழகனா
துண்ட வெண்பிறை வைத்த இறையவர்
அண்ட வாணர்க் கருளுமா ரூரரே. ௩

விடையு மேறுவர் வெண்தலை யிற்பலி
கடைகள் தோறுந் திரியுமெங் கண்ணுதல்
உடையுஞ சீரை யுறைவது காட்டிடை
அடைவா போலரங் காகவா ரூரரே. ௪

துளைகனை வேழத் துரியுடல் போாத்தவர்
வளைகனை யாளையொா பாக மகிழ்வெய்தித்
திளைகுந் திஙகட் சடையில் திசைமுழு
தளககுஞ் சிநதையர் போலுமா ரூரரே. ரு

பண்ணி னின்மொழி யாளையொா பாகமா
விண்ணி னூர்விளங் கும்மதி சூடியே
சுண்ண நீறுமெய்ப் பூசிச் சுடலையின்
அண்ணி யாடுவர் போலுமா ரூரரே. சு

மட்டு வாாகுழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனா
கட்டு வாங்கங் கனன்மழு மான்தனோ
டட்ட மாம்புய மாகுமா ரூரரே. எ

தேய்ந்த திங்கள் கமழ்சடை யனகனல்
ஏந்தி யெல்லியு ளாடு மிறைவனா
காய்ந்து காமனை நோககின கண்ணினர்
ஆய்ந்த நானமறை யோதுமா ரூரரே. அ

உண்டு நஞ்சுகண் டத்து ளடககியங
கிண்டை செஞ்சடை வைதத இயல்பினை
கொண்ட கோவண ஆடையன் கூரெரி
அண்ட வாண ரடையுமா ரூரரே. கூ

மாலு நான்முக னும்மறி கிற்கிலா
கால னைய அவனைக கடந்திட்டுச்
சூல மானமழு வேந்திய கையினா
ஆல முண்டழ காயவா ரூரரே. கய

திருச்சிற்றம்பலம்

---

## திருஆரூா - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி
பக்க மேபகு வாயன பூதங்கள்
ஒக்க ஆட லுகநதுடன கூத்தராய்
அக்கி னேடர வாாப்பரா ரூரரே. க

எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன
அந்த மில்புக ழாரூ ரரனெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. உ

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக
கிண்டை மாலை புனைந்து மிராப்பகல்
தொண்ட ரா்கித் தொடர்ந்து விடாதவாக்
கண்ட மாளவும் வைப்பரா ரூரரே. ரு

துனபெ லாமற நீங்கிச் சுபத்தராய்
என்பெ லாம்நெக் கிராப்பக லேத்திநின்

றினப ராய்நினைந் தெனறு மிடையறா
அனப ராமவாக கனபாரா ரூரரே ௪

முருட்டு மெத்தையில் முனகிடத தாமுனம்
அரட்டர் ஐவரை ஆசறுத திட்டுநீர்
முரட்ட டிததவத தககனறன் வேள்வியை
அரட்ட டககித னாரூ ரடைமினே. ௫

எம்மை யாரிலை யானுமு ளேனலேன
எம்மை யாரு மிதுசெய வல்லரே
அம்மை யாரெனக கெனறென் றரற்றினேற்
கம்மை யாரைததந் தாராரூ ரையரே. ௬

தண்ட வாளியைத் தக்கன்றன வேள்வியைச்
செண்ட தாடிய தேவா கண்டனைக்
கண்டு கண்டிவள் காதலித் தன்பதாய்க்
கொண்டி யாயின வாறெனறன் கோதையே. ௭

இவள்ந மைப்பல பேசத் தொடங்கினாள்
அவண மனறெனி லாரூ ரனானும்
பவனி வீதி விடங்கனைக் கண்டிவள
தவனி யாயின வாறெனறன தையலே. ௮

நீரைச் செஞ்சடை வைதத நிமலனா
காரொத் தமிடற் றர்கனல வாயரா
ஆரத் தருறை யும்மணி யாரூரைத்
தூரத் தேதொழு வார்வினை தூளியே. ௯

உள்ள மேயொன் றுறுதி யுரைப்பனநான்
வெள்ளந் தாஙகு விரிசடை வேதியன
அள்ளல் நீர்வய லாரூ ரமாந்தவெம்
வள்ளல் சேவடி வாழ்த்தி வணஙகிடே. ௧௦

விண்ட மாமலர் மேலுறை வானொடும்
கொண்டல் வண்ணனுங கூடி யறிகிலா
அண்ட வாணனத னாரூ ரடிதொழப்
பண்டை வல்வினை நில்லா பறையுமே. ௧௧

மையு லாவிய கண்டத்த னண்டத்தன
கையு லாவிய சூலத்தன கண்ணுதல்
ஐய னாரு ரடிதொழு வார்க்கெலாம்
உய்ய லாம்அல்லல் ஒன்றிலை காண்மினே. கஉ

திருச்சிற்றம்பலம்

---

## திருஅன்னியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாற லைத்த படுவெண் தலையினன
நீற லைத்தசெம் மேனியன நேரிழை
கூற லைத்தமெய் கோளர வாட்டிய
ஆற லைத்த சடையனனி யூரனே. க

பண்டொத் தமொழி யாளையோர் பாகமாய்
இண்டைச் செஞ்சடை யனனிருள் சேர்ந்ததோர்
கண்டத் தன்கரி யின்னுரி போர்த்தவன
அண்டத் தப்புரத் தானனனி யூரனே. உ

பரவி நாளும் பணிந்தவா தம்வினை
துரவை யாகத் துடைப்பவர் தம்மிடம்
குரவம் நாறுங் குழலுமை கூறராய்
அரவ மாட்டுவர் போலனனி யூரரே. ௩

வேத கீதாவின் ணோக்கு முயாந்தவா
சோதி வெண்பிறை துன்று சடைக்கணி
நாதர் நீதியி னலடி யாாதமக்
காதி யாகிநின ரானனனி யூரரே. ௪

எம்பி ரானிமை யோாகள் தமக்கெலாம்
இன்ப ராகி யிருந்தவெம மீசனா
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்
கன்ப ராகிநின ரான்னி யூரரே. ௫

வெந்த நீறுமெய் பூசுநன மேனியர்
கந்த மாமலர் சூடுங் கருததினர்

சிந்தை யாசிவ ஞாசெய்ய தீவண்ணா
அந்த ணாளாகண் டீரனனி யூரரே. சு

ஊனை யாதலை யிற்பலி கொண்டுழல்
வானை வானவர் தாங்கள் வணங்கவே
தேனை யாகுழ லாளையொர் பாகமா
ஆனை யீருரி யாரனனி யூரரே. எ

காலை போய்ப்பலி தோவாகண் ணார்நெற்றி
மேலை வானவா வந்து விரும்பிய
சோலை சூழ்புறங் காடரங் காகவே
ஆலின் கீழறத் தாரனனி யூரரே. அ

எரிகொள் மேனிய ரென்பணிந் தினபராய்த்
திரியு மூவெயில் தீயெழச் செறறவர்
கரிய மாலொடு நானமுகன் காண்பதற்
கரிய ராகினின ரூரனனி யூரரே. கூ

வஞ்ச ரககனை கரமுஞ் சிரதொடும்
அஞசு மஞசுமோ ராறுநான கும்மிறப்
பஞசின மெல்விர லாலடாத் தாயிழை
அஞச லஞசலென ரூரனனி யூரரே. க0

திருச்சிற்றம்பலம்

---

## திருமறைக்காடு - திருக்குறுந்தொகை

திருசசிற்றம்பலம

ஓத மால்கடல் பாவி யுலகெலாம்
மாத ரார்வலங் கொண்மறைக் காடரைக்
காதல் செய்து கருதப் படுமவா
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. க

பூகஞுந் தாழை புறணி யருகெலாம்
ஆகசந் தானுடை மாமறைக் காடரோ
ஆகஞுங் காண்பரி யீரடி யார்தம்மை
நோக்கிக் காண்பது நும்பணி செய்யிலே. உ

புன்னை ஞாழல் புறணி யருகெலாம்
மன்னி னாவலங் கொள்மறைக் காடரோ
அன்ன மென்னடை யாளையொர் பாகமாச்
சின்ன வேட முகப்பது செல்வமே. ௩

அட்ட மாமலர் சூடி யடும்பொடு
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
நட்ட மாடியும் நான்மறை பாடியும்
இட்ட மாக விருக்கு மிடமிதே. ௪

நெய்த லாம்பல் நிறைவயல் சூழ்தரும்
மெய்யி னாவலங் கொண்மறைக் காடரோ
தையல் பாகங்கொண் டீர்கவர் புன்சடைப்
பைதல் வெண்பிறை பாம்புடன் வைப்பதே. ௫

துஞ்சும் போதுந் துயிலின்றி யேத்துவார்
வஞ்சின் றிவலங் கொண்மறைக் காடரோ
பஞ்சின் மெல்லடிப் பாவை பலிகொணர்ந்
தஞ்சி நிற்பது மைந்தலை நாகமே. ௬

திருவி னாசெல்வ மல்கு விழாவணி
மருவி னார்வலங் கொண்மறைக் காடரோ
உருவி னாளுமை மங்கையொர் பாகமாய்
மருவி னாய்கங்கை யைச்சென்னி தன்னிலே. ௭

சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொண்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பது மன்றியே
அங்கை யில்லன லேந்த லழகிதே. ௮

குறைக்காட் டானவிட் டதேர்குத்த மாமலை
இறைக்காட் டியெடுத் தானதலை யீரைந்தும்
மறைக்காட் டான்இறை யூன்றலும் வாய்விட்டான்
இறைக்காட் டாயெம் பிரானுனை யேத்தவே. ௯

திருச்சிற்றம்பலம்

---

# திருமறைக்காடு - திருக்குறுந்தொகை

திருசசிறறம்பலம்

பண்ணின நேர்மொழி யாளுமை பஙகரோ
மண்ணி னாரவலஞ் செய்மமறைக காடரோ
கண்ணி னாலுமைக காணக கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள செயமமினே. க

ஈண்டு செஞசடை யாகத்து ளீசரோ
மூண்ட காமுகி லினமுறிக கண்டரோ
ஆண்டு கொண்டநீ ரேயருள் செய்திடும்
நீண்ட மாககத வினவலி நீககுமே. உ

அட்ட மூர்த்திய தாகிய அபபரோ
துட்டா வானபுரஞ சுட்ட சுவண்டரோ
பட்டங கட்டிய செனனிப் பாமரோ
சட்ட விககத வந்திறப பிம்மினே. ங

அரிய நானமறை யோதிய நாவரோ
பெரிய வானபுரஞ சுட்ட சுவண்டரோ
விரிகொள கோவண ஆடை விருததரோ
பெரிய வானகத வமபிரி விககவே. ச

மலையில் நீடிருக் கும்மறைக காடரோ
கலைகள் வநதிறைஞ சுங்கழ லேததரோ
விலையில் மாமணி வணண வுருவரோ
தொலைவி லாககத வந்துணை நீககுமே. ரு

பூககுந் தாழை புறணி யருகெலாம்
ஆககுந தணபொழில் சூழ்மறைக காடரோ
ஆககுங் காணபரி யீரடி கேளுமை
நோககிக காணக கதவைத் திறவுமே. சா

வெந்த வெண்பொடிப் பூசும் விகிாதரோ
அந்த மிலலி யணிமறைக காடரோ
எந்தை நீயடி யார்வந் திறைஞ்சிட
இந்த மாக்கத வம்பிணி நீக்குமே. எ

ஆறு சூடும் அணிமறைக் காடரோ
கூறு மாதுமைக் கீந்த குழகரோ
ஏற தேறிய எம்பெரு மானிந்த
மாறி லாக்கத வம்வலி நீக்குமே. ௮

சுண்ண வெண்பொடிப் பூசுஞ் சுவண்டரோ
பண்ணி யேறுகந் தேறும் பரமரோ
அண்ண லாதி யணிமறைக் காடரோ
திண்ண மாகக்த வந்திறப் பிம்மினே. ௯

விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே
மண்ணு ளார்வணங் கும்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. ௧௦

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## திருமீயச்சூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. ௧

வந்த னையடைக் கும்மடித் தொண்டர்கள்
பந்த னைசெய்து பாவிக்க நின்றவன்
சிந்த னைதிருத் துந்திரு மீயச்சூர்
எந்தை மையுடை யாரிளங் கோயிலே. ௨

பஞ்ச மந்திரம் ஓதும் பரமனார்
அஞ்ச ஆனை யுரித்தன லாடுவார்

நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்
எந்தை மையுடை யாரிளங் கோயிலே. ௩

நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடையிடை
ஆறு கொண்டுகந் தானதிரு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. ௪

வெவ்வ வண்ணத்து நாகம் வெருவவே
கவ்வ வண்ணக் கனல்விரித் தாடுவா
செவ்வ வண்ணந் திகழ்திரு மீயச்சூா
எவ்வ வண்ணம் பிரானிளங் கோயிலே. ௫

பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும்
பின்னுஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று
மின்னு மேகலை யாளொடு மீயச்சூா
இன்ன நாள்அக லாரிளங் கோயிலே. ௬

படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்
சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் நீற்றினன்
விடைகொ ளூர்தியி னானதிரு மீயச்சூர்
இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. ௭

ஆறு கொண்ட சடையினா தாமுமோர்
வேறு கொண்டதொா வேடத்த ராகிலும்
கூறு கொண்டுகந் தாளொடு மீயச்சூா
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. ௮

வேதத் தானென்பா வேள்வியு ளானென்பா
பூதத்தா னென்பா புண்ணியன் தன்னையே
கீதத் தான்கிள ருந்திரு மீயச்சூர்
ஏதந் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. ௯

கடுக்கண் டன்கயி லாய மலைதனை
எடுக்க லுற்ற இராவணன் ஈடற
விடுக்க ணின்றி வெகுண்டவன் மீயச்சூர்
இடுக்கண் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

கரைந்து கைதொழு வாரையுங் காதலன்
வரைந்து வைதெழு வாரையும் வாடலன்
நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும்
விரைந்து போவது வீழி மிழலைக்கே. க

ஏற்று வெல்கொடி யீசன்ற னாதிரை
நாற்றஞ் சூடுவா னனறுந் திங்களார்
நீற்றுச் சந்தன வெள்ளை விரவலார்
வேற்றுக் கோலங்கொள் வீழி மிழலையே. உ

புனைபொற் சூலத்தன் போர்விடை யூர்தியான்
வினைவெல் நாகத்தன் வெண்மழு வாளினன்
நினைய நின்றவ னீசனை யேயென்று
வினையி லார்தொழும் வீழி மிழலையே. ௩

மாடத் தாடு மனத்துடன் வைத்தவர்
கோடத் தார்குருக் கேத்திரத் தார்பலர்
பாடத் தார்பழிப் பார்பழிப் பல்லதோர்
வேடத் தார்தொழும் வீழி மிழலையே. ௪

எடுத்த வெல்கொடி யேறுடை யானமர்
உடுப்பர் கோவண முண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழி மிழலைக்கே. ௫

குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையால்
உழலை யாக்கையை யூணு முணாவிலீர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினேன்
மிழலை யானடி சாரவின் ணுளவரே. ௬

தீர்ன தீத்திர ளன்சடைத் தங்கிய
நீர ஞடிய நீற்றன்வண் டார்கொன்றைத்
தாரன் மாலையன் தண்நறுங் கண்ணியன்
வீரன் வீழி மிழலை விகிர்தனே ௭

எரியி னானிறை யாரிடு காட்டிடை
நரியி னாபரி யாமகிழ் கின்றதோர்
பெரிய னார்தம பிறப்பொடு சாதலை
விரியி னாதொழும் வீழி மிழலையே. அ

நீண்ட சூழ்சடை மேலொர் நிலாமதி
காண்டு சேவடி மேலொா கனைகழல்
வேண்டு வாரவர் வீதி புகுந்திலா
மீண்டும் போவது வீழி மிழலைக்கே. கூ

பாலை யாழொடு செவவழி பண்கொள
மாலை வானவா வந்து வழிபடும
ஆலை யாரழ லந்தண ராகுதி
வேலை யாாதொழும வீழி மிழலையே. க0

மழலை யேறறு மணாளன திருமலை
சுழல ஆாத்தெடுத் தானமுடி தோளிறக்
கழல்கொள் காலில் திருவிர லூனறலும்
மிழலை யானடி வாழகென விட்டதே. கக

திருசசிற்றம்பலம

---

## திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை

திருச்சிறறம்பலம்

எனபொ னேயிமை யோாதொழு பைங்கழல்
நனபொ னேநலந் தீங்கறி வொனறிலேன்
செம்பொ னேதிரு வீழி மிழலையுள
அனப னேயடி யேனைக் குறிகொளே. க

கண்ணி னற்களி கூரகை யால்தொழு
தெண்ணு மாறறி யாதிளைப் பேனறனை
விண்ணு ளார்தொழும வீழி மிழலையுள்
அண்ண லேயடி யேனைக குறிகொளே. உ

ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத தேகருத் தாற்றொழும்

சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேயடி யேனைக் குறிக்கொளே. ரு

முத்த னேமுதல் வாமுகி ழும்முளை
ஒத்த னேயொரு வாவுரு வாகிய
சித்த னேதிரு வீழி மிழலையுள்
அத்த னேயடி யேனைக் குறிககொளே. சு

கருவ னேகரு வாய்த்தெளி வாக்கெலாம்
ஒருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழி மிழலையுள்
குருவ னேயடி யேனைக் குறிககொளே. ள

காத்த னேபொழி லேழையுங காதலால்
ஆத்த னேயம ராககயன றனதலை
சேர்த்த னேதிரு வீழி மிழலையுள்
கூத்த னேயடி யேனைக் குறிககொளே. கு

நீதி வானவா நிதநல் நியமஞசெய்
தோ்தி வானவ ரும்முண ராததோர்
வேதி யாவிகிர் தாதிரு வீழியுள்
ஆதி யேயடி யேனைக குறிக்கொளே. எ

பழகி நினனடி சூடிய பாலனைக
கழகின மேலவைதத காலனைச் சாடிய
அழக னேயணி வீழி மிழலையுள்
குழக னேயடி யேனைக குறிககொளே. அ

அண்ட வானவா கூடிக் கடைந்தநஞ்
சுண்ட வானவ னேயுணா வொனறிலேன
விண்ட வான்பொழில் வீழி மிழலையுள்
கொண்ட னேயடி யேனைக் குறிககொளே. கூ

ஒருத்தன் ஓங்கலைத தாங்க லுற்றானுரம்
வருத்தி னய்வஞ்ச னேனமனம் மனனிய
திருத்த னேதிரு வீழி மிழலையுள்
ஒருத்த னேயடி யேனைக குறிககொளே. க0

திருச்சிற்றம்பலம்

## திருவிடைமருது - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே. ௧

மறையின் நாண்மலர் கொண்டடி வானவர்
முறையி னால்முனி கள்வழி பாடுசெய்
இறைவ னெம்பெரு மானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமெ னுள்ளமே. ௨

கொன்றை மாலையுங் கூவிள மத்தமும்
சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்
என்று மெந்தை பிரானிடை மருதினை
நன்று கைதொழு வார்வினை நாசமே. ௩

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேபிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளு மிடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. ௪

வண்ட ணைந்தன வன்னியுங் கொன்றையும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்
எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறும் மேலை வினைகளே. ௫

ஏற தேறு மிடைமரு தீசனார்
கூறு வார்வினை தீர்க்குநற் குழகனார்
ஆறு செஞ்சடை வைத்த அழகனார்க்
கூறி யூறி யுருகுமெ னுள்ளமே. ௬

விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்
மண்ணு ளாரும் மதிக்கப் படுபவர்
எண்ணி னார்பொழில் சூழிடை மருதினை
நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. ௭

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனோ
கந்த மாலைகள் சூடுங் கருத்தனோர்
எந்தை யெனனிடை மருதினி லீசனைச்
சிந்தை யாலநினை வாரவினை தேயுமே. அ

வேத மோதும் விரிசடை யண்ணலார
பூதம பாடநின றாடும புனிதனோ
ஏதந் தீர்க்கு மிடைமரு தாவெனறு
பாத மேத்தப பறையுமநம பாவமே. க

கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லாக்குழற் பாவைநல லாரினும
தனிமு டிகவித் தாளு மரசினும
இனியன தனனடைந் தார்க்கிடை மருதனே. க0

முற்றி லாமதி சூடும் முதலவனோ
ஒற்றி னாமலை யாலரக கனமுடி
எற்றி னாகொடி யாரிடை மருதினைப்
பற்றி னாரைப் பற்றாவினைப் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருவிடைமருது - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

பறையி னோசையும பாடலி னோசையும்
மறையி னோசையும வைகும வயலெலாம்
இறைவ னெஙகள பிரானிடை மருதினில
உறையு மீசனை யுள்குமென னுளளமே. க

மனத்துள மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைமமதி சூடியை
எனக்குத தாயையெம் மானிடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்தெனை னுளளமே. உ

வண்ட லணநதன வனனியும் மததமும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூததனை

எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறும் மேலை வினைகளே. ௩

துணையி லாமையில தூங்கிருட் பேய்களோ
டணைய லாவ தெமககரி தேயென
இணையி லாவிடை மாமரு தில்லெழு
பணையி லாகமஞ் சொல்லுந்தன பாஙகிககே. ௪

மண்ணை யுண்டமால காணனை மலரடி
விண்ணை விண்டயன் காணனை வியனமுடி
மொண்ணை மாமரு தாவெனவெறன மொயகுழல்
பண்ணை யாயமுந் தானும் பயிலுமே. ௫

மங்கை காணக் கொடாமண மாலையைக
கங்கை காணக் கொடாமுடிக கண்ணியை
நங்கை மீரிடை மருதரிந நங்கைக்கே
எஙகு வாங்கிக் கொடுத்தா ரிதழியே. ௬-எ-அ-கூ-க0-கக.

திருச்சிறறம்பலம்

---

## திருப்பேரெயில் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம

மறையும் ஓதுவர் மான்மறிக் கையினா
கறைகொள கண்ட முடைய கபாலியாா
துறையும் போகுவர் தூயவெண் ணீற்றினர்
பிறையுஞ் சூடுவா பேரெயி லாளரே. க

கணக்கி லாரையுங் கற்றுவல் லாரையும்
வணககி லாநெறி கண்டுகொண் டாரையும்
தணக்கு வார்தணிப் பாரெப் பொருளையும்
பிணக்கு வாரவர் பேரெயி லாளரே. உ

சொரிவிப் பாரமழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி

எரிவிப் பார்தணிப் பாரெப் பொருளையும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. ௩

செறுவிப் பார்சிலை யால்மதில் தீர்த்தங்கள்
உறுவிப் பாரபல பத்தாக ளூழ்வினை
அறுவிப் பாரது வன்றியும் நல்வினை
பெறுவிப் பாரவா பேரெயி லாளரே. ௪

மற்றை யாரறி யாாமழு வாளினா
பற்றி யாட்டியோ ரைந்தலைப் பாம்பரைச்
சுற்றி யாரவா தூநெறி யால்மிகு
பெற்றி யாரவா பேரெயி லாளரே. ௫

திருக்கு வாாகுழற் செல்வன சேவடி
இருககு வாய்மொழி யால்தனை யேதருவாா
சுருக்கு வார்துயா தோறறங்க ளாற்றறப்
பெருக்கு வாரவா பேரெயி லாளரே. ௬

முனனை யாாமயி லூர்தி முருகவேள்
தனனை யாரெனில் தானோ தலைமகன
என்னை யாளுமி றையவ னெம்பிரான
பினனை யாரவர் பேரெயி லாளரே. ௭

உழைத்துந் துள்ளியு முள்ளத்து ளேயுரு
இழைதது மெந்தை பிரானென றிராப்பகல்
அழைககு மன்பின ராய அடியவா
பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே. ௮

நீரு லாகிமிா புனசடை யாவெறு
ஏரு லாவநங் கனதிறல் வாட்டிய
வாரு லாவன மெனமுலை யாளொடும்
பேரு ளாரவர் பேரெயி லாளரே. ௯

பாணி யார்படு தம்பெயர்ந் தாடுவர்
தூணி யார்விச யற்கருள் செய்தவா
மாணி யாய்மண் ணளந்தவன நான்முகன
பேணி யாரவர் பேரெயி லாளரே. ௧௦

மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம்
சிதைக்க வேதிரு மாமலைக் கீழ்ப்புகருப்
பதைத்தங் காரத்தெடுத்த தான்பத்து நீண்முடி
பிதக்க வூன்றிய பெரியி லாளரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருவெண்ணி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முத்தி னைப்பவ ளத்தை முளைத்தவெம்
தொத்தி னைச்சுட ரைச்சுடர் போலொளிப்
பித்த னைக்கொலும் நஞ்சினை வானவா
நித்த னைநெரு நற்கண்ட வெண்ணியே.

வெண்ணித் தொல்நகர் மேயவெண் திங்களார்
கண்ணித தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித திட்டமு தூறுமென் நாவுக்கே. உ

காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி
நீற்றி னைநினைப் பாரவினை நீக்கிடும்
கூற்றி னையுதைத் திட்ட குணமுடை
வீற்றி னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௩

நல்ல னைத்திகழ் நான்மறை யோதியைச்
சொல்ல னைச்சுட ரைச்சுடர் போலொளிர்
கல்ல னைக்கடி மாமதில் மூன்றெய்த
வில்ல னைநெரு நற்கண்ட வெண்ணியே. ௪

சுடரைப் போலொளிர் சுண்ணவெண் ணீற்றனை
அடருஞ் சென்னியில் வைத்த அமுதினைப்
படருஞ் செஞ்சடைப் பான்மதி சூடியை
இடரை நீக்கியை யான்கண்ட வெண்ணியே. ௫

பூத நாதனைப் பூம்புக லூரனைத்
தாதெ னத்தவ ழும்மதி சூடியை

நாதனை நல்ல நானமறை யோதியை
வேத னைநெரு நற்கண்ட வெண்ணியே. சு

ஒருத்தி யையொரு பாகத் தடக்கியும்
பொருத்தி யபுனி தன்புரி புனசடைக்
கருத்த னைக்கறைக் கண்டனைக் கண்ணுதல்
நிருத்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. எ

சடைய னைச்சரி கோவண ஆடைகொண்
டுடைய னையுணர் வார்வினை தீர்த்திடும்
படைய னைமழு வாளொடு பாய்தரும்
விடைய னைநெரு நறகண்ட வெணணியே. அ

பொருப்ப னைப்புன லாளொடு புனசடை
அருப்ப னையிளந் திங்களங் கண்ணியான
பருப்ப தம்பர வித்தொழுந தொண்டாகள
விருப்ப னைநெரு நறகண்ட வெண்ணியே. கூ

சூல வஞ்சனை வல்லவெஞ் சுந்தரன்
கோல யாஅருள் செய்ததோர் கொள்கையான
காலன அஞ்ச வுதைததிருள் கண்டமாம்
வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே. கo

இலையி னாகொனறை சூடிய ஈசனா்
மலையி னலாக் கனதிறல் வாட்டினா
சிலையி னலமதி லெய்தவன வெண்ணியைத்
தலையி னல்தொழு வார்வினை தாவுமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கடம்பந்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மூற்றி லாமுலை யாளிவ ளாகிலும்
அற்றந் தீாக்கு மறிவில ளாகிலும
கற்றைச் செஞ்சடை யானகடம் பந்துறைப்
பெற்றம் ஊர்தியென் றாளெங்கள் பேதையே. க

தனகி ருந்தொரா தனமைய ராகிலும
முனகு தீரத தொழுதெழு மினகளோ
கனகப் புனசடை யானகடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும பாள்வரே. உ

ஆரி யந்தமி ழோடிசை யானவன
கூரி யகுணத் தார்குறி நினறவன
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென றடை மினகளே. ரு

பண்ணின இனமொழி கேட்கும் பரமனை
வண்ண நனமல ரானபல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே ச

மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளுற வைம்மினோ
கறைகண் டன்னுறை யுங்கடம பந்துறை
சிறைகொண் டவவினை தீரத் தொழுமினே. ரு

நங்கை பாகம்வைத் தந்நறுஞ் சோதியைப்
பங்க மினறிப் பணிந்தெழு மினகளோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்க மோதி யரனுறை கின்றதே. சு

அரிய நான்மறை யாறங்க மாயைந்து
புரியன தேவர்க ளேத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னனகடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. எ

பூமென கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்க ளுள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநம் தீவினை நாசமே. அ

பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர

கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. ௯

நூலால் நன்று நினைமின்கள் நோய்கெடப்
பாலா னைந்துட னாடும் பரமனார்
காலா லூன்றுகந் தானகடம் பந்துறை
மேலா னஞ்செய்த வல்வினை வீடுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கடம்பூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தளருங் கோளர வத்தொடு தண்மதி
வளருங் கோல வளர்சடை யார்க்கிடம்
கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களருங் கார்க்கடம் பூர்க்கரக் கோயிலே. ௧

வெல்வ லான்புல னைந்தொடு வேதமும்
சொல்வ லானசுழ லுந்தடு மாற்றமும்
அல்வ லானமனை யார்ந்தமென் தோளியைக்
கல்வ லானகடம் பூர்க்கரக் கோயிலே. ௨

பொய்தொ ழாது புலியுரி யோன்பணி
செய்தெ ழாவெழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவ ரெள்கநீர்
கைதொ ழாவெழு மின்கரக் கோயிலே. ௩

துண்ணெ னாமனத் தால்தொழு நெஞ்சமே
பண்ணி னால்முனம் பாட லதுசெய்தே
எண்ணி லாரெயில் மூன்று மெரித்தமுக்
கண்ணி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. ௪

சுனையுள் நீல மலரன கண்டத்தன்
புனையும் பொன்னிறக் கொன்றை புரிசடைக்
கனையும் பைங்கழ லான்கரக் கோயிலை
நினையு முள்ளத் தவர்வினை நீங்குமே. ௫

குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும்
வணங்கி வாழ்த்துவ ரன்புடை யாரெலாம்
வணங்கி வானமலா கொண்டடி வைகலும்
கணங்கள் போறறிசைக் குங்காக கோயிலே. சு

பண்ணி னாமறை பல்பல பூசனை
மண்ணி னார்செய்வ தனறியும் வைகலும்
விண்ணி னாகள் வியக்கப் படுவன
கண்ணி னாகடம் பூர்க்கரக் கோயிலே. எ

அங்கை ஆரழ லேந்திநின் றாடலன
மங்கை பாட மகிழ்ந்துடன வார்சடைக்
கங்கை யானுறை யுங்காக் கோயிலைத்
தங்கை யால்தொழு வார்வினை சாயுமே. அ

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தனக டனனடி யேனையுந் தாங்குதல்
என்க டனபணி செய்து கிடப்பதே. கூ

பணங்கொள் பாற்கடல் பாம்பணை யானொடும்
மணங்க மழ்மலர்த் தாமரை யானவன்
பிணங்கும் போழ லெம்பெரு மாற்கிடம்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. க0

வரைக்கண் நாலஞ்சு தோளுடை யானதலை
அரைகக வூனறி யருள்செய்த ஈசனூர்
திரைகளுந் தண்புனல் சூழ்கரக கோயிலை
உரைக்கு முள்ளத் தவர்வினை யோயுமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கடம்பூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒருவ ராயிரு மூவரு மாயவன்
குருவ தாய குழக னுறைவிடம்
பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ்
கருவ தாங்கடம் பூரககரக கோயிலே. க

வன்னி மத்தம் வளரிளந் திங்களோா
கன்னி யாளைக கதிர்முடி வைததவன
பொனனினை மல்கு புணாமுலை யாளொடும்
மன்னி னைகடம் பூாக்காக கோயிலே. உ

இல்லக் கோலமு மிந்த இளமையும்
அல்லற் கோல மறுத்துய வல்லிரே
ஒலலைச் சென றடை யுங்கடம் பூாஙகாச்
செலவக் கோயில் திருக்காக் கோயிலே. ௩

வேறு சிந்தை யிலாதவா தீவினை
கூறு செய்த குழக னுறைவிடம
ஏறு செல்வத் திமையவா தாந்தொழும்
ஆறு சோகடம் பூாககாக் கோயிலே. ௪

திங்கள் தங்கிய செஞ்சடை மேலுமோா
மங்கை தங்கும் மணாள னிருபபிடம்
பொங்கு சோமணற் புனனையும் ஞாழலும்
தெங்கு சோகடம் பூர்க்காக் கோயிலே. ௫

மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலாம்
எல்லை யான பிரானா ரிருப்பிடம்
கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை
நல்ல சேர்கடம் பூர்க்காக கோயிலே. ௬

தளரும் வாளா வதமொடு தண்மதி
வளரும் பொற்சடை யாறகிட மாவது
கிளருமபேரொலி கினனாம் பாட்டறுக
களரி யாாகடம் பூர்க்காக் கோயிலே. ௭

உற்றா ராயுற வாகி யுயிாக்கெலாம்
பெறறா ராய பிரானா ருறைவிடம
முற்றா மும்மதி லெயத முதல்வனாா
கறறார் சோகடம் பூாககாக கோயிலே. ௮

வெள்ளை நீறணி மேனிய வாககெலாம
உள்ள மாய பிரானா ருறைவிடம

பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன சோகடம் பூர்ககரக கோயிலே. க

பாப்பு நீரிலங் கைககிறை வனஅவன
உரததி ஞலடுக கலஎடுக் கலலுற
இரக்க மின றி யிறைவிர லாறறலே
அரககி ஞனகடம் பூரககரக கோயிலே. கo

திருச்சிற்றம்பலம்

## திருஇன்னம்பர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஏனனி லாரு மெனககினி யாரில்லை
ஏனனி லும்மினி யாமொரு வனனுளன
ஏனனு ளேயுயிாப் பாய்பபுறம் போந்துபுக
கென்னு ளேநிறகும் இனனம்ப ரீசனே. க

மட்டுண பாரகள் மடந்தையா வாட்கண்ணல்
கட்டுண் பாரகள் கருதுவ தெனகொலோ
தட்டி முட்டிந தளளாடித் தழூக்குழி
எட்டு மூாததிய ரினனம்ப ரீசனே. உ

கனலுங கணணியுந் தண்மதி யோடுடன
புனலுங் கொனறையுஞ சூடும புரிசடை
அனலுஞ் சூலமும மானமறிக கையினா
எனலு மெனமனத் தினனம்ப ரீசனே. ந

மழைககண் மாமயி லாலு மகிழ்சசியான
அழைககுந தனனடி யாரகளத மனபினைக்
குழைககுந் தனனைக குறிக்கொள வேண்டியே
இழைககு மெனமனத் தினனமப ரீசனே. ச

தெனன வனனெனை யாளுஞ சிவனவன
மனன வனமதி யமமறை யோதியான
முனன மன்னவன் சோவன பூழியான
இனனம் இனபுற்ற வினனமப ரீசனே. ரு

விளக்கும் வேறு படப்பிற ருள்ளத்தில்
அளக்குந் தன்னடி யார்மனத் தனபினை
குளக்கு மெனனைக் குறிகொள வேண்டியே
இளக்கு மெனமனத் தினனம்ப ரீசனே. சு

சடைக்க ணாள்புன லாள்அனல் கையதோர்
கடைக்க ணால்மங்கை நோக்கும வானமகள்
படைக்க ணால்பரு கப்படு வானநமக
கிடைக்க ணய்நின்ற வினனம்ப ரீசனே. எ

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின ருரையும
பொழுது போககிப் புறககணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கினனம்ப ரீசனே. அ

விரியுந் தணணிள வேனிலில் வெண்பிறை
புரியுங் காமனை வேவப் புருவமும்
திரியு மெல்லையில் மும்மதில் தீயெழுந்
தெரிய நோககிய வினனம்ப ரீசனே. கூ

சனியும் வெள்ளியுந் திங்களும் ஞாயிறும்
முனிவ ணய்முடி பத்துடை யானறனைக
கனிய வூனறிய காரண மெனகொலோ
இனிய ணய்நின்ற வினனம்ப ரீசனே. கய

திருச்சிறறமபலம்

---

## திருக்குடமூக்கு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூவ ணத்தவன் புண்ணிய னண்ணியங்
காவ ணத்துடை யானடி யார்களைத
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோா
கோவ ணத்துடை யானகுட மூக்கிலே. க

பூத்தா டிக்கழி யாதேநீா பூமியீா
தீத்தா டித்திறஞ் சிந்தையுள் வைம்மினோ

வேர்த்தா டுங்காளி தன்விசை தீர்கென்று
கூத்தா டியுறை யுங்குட மூக்கிலே. உ

நங்கை யாளுமை யாளுறை நாதனார்
அங்கை யாளொ டறுபதந் தாழ்சடைக்
கங்கை யாளவள் கன்னி யெனப்படும்
கொங்கை யாளுறை யுங்குட மூக்கிலே. ங

ஓதா நாவன் திறத்தை யுரைத்திரேல்
ஏதா னும்மினி தாகும் மியமுனே
சேதா ஏறுடை யானமர்ந் தவிடம்
கோதா விரியுறை யுங்குட மூக்கிலே. ச

நக்க ரையனை நாடொறும நன்னெஞ்சே
வக்க ரையுறை வானை வணங்குநீ
அக்க ரையோ டரவரை யார்த்தவன்
கொக்க ரையுடை யான்குட மூக்கிலே. ரு

துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள்
பிறவி நீங்கப் பிதற்றுமின பித்தராய்
மறவனாயப பார்த்தன மேற்கணை தொட்டவெம்
குறவ னாருறை யுங்குட மூக்கிலே. சா

தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர
விண்ட வர்புரம் மூன்றொரு மாத்திரைக
கொண்ட வனுறை யுங்குட மூக்கிலே. எ

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமியஞ் செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. அ

சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின
பிரமன மாலொடு மற்றொழிந் தாக்கெலாம
குரவ னாருறை யுங்குட மூக்கிலே. கூ

அன்று தானரக் கனகயி லாயத்தைச்
சென்று தானெடுக் கவுமை யஞ்சலும்
நன்று தானநக்கு நல்விர லூனறிப்பின
கொன்று கீதங்கேட் டானகுட மூக்கிலே. ௧0

திருச்சிற்றம்பலம்

## திருநீன்றியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

கொடுங்கண் வெண்தலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தோந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயா நினறியூரக்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. ௧

வீதி வேல்நெடுங் கண்ணியா வெள்வளை
நீதி யேகொளப் பாலது நின்றியூர்
வேத மோதி விளஙகுவெண் தோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தவெங் கள்வரே. ௨

புற்றி னார வம்புலித தோல்மிசைச்
சுற்றி னர்சுண்ணப் போரவைகொண் டார்சுடர்
நெற்றிக கண்ணுடை யாரமர் நினறியூர்
பறறி னரைப்பற் றுவினைப் பாவமே. ௩

பறையி னேசையும் பாடலி னேசையும்
மறையி னேசையும மலகி யயலெலாம்
நிறையும் பூம்பொழில சூழ்திரு நினறியூர்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. ௪

சுனையுள் நீலஞ் சுளியும் நெடுங்கணாள்
இனைய னெனறென்று மேசுவ தெனகொலோ
நினையுந் தண்வயல் சூழ்திரு நினறியூர்ப்
பனையின ஈருரி போர்த்த பரமரே. ௫

உரைப்பக் கேண்மின்நும் உச்சியு ளான்றனை
நிரைப்பொன மாமதில் சூழ்திரு நினறியூர்

உரைப்பொற கற்றைய ராரிவ ரோவெனில்
திரைத்துப் பாடித் திரிதருஞ செல்வரே. ௬

கனறி யூாமுகில் போலுங கருஙகளி
றினறி எறல ஞலிது எனகொலோ
நினறி யூாபதி யாக நிலாயவன
வெனறி யேறுடை யெங்கள விகிர்தனே. எ

நிலையி லாவெள்ளை மாலையன நீண்டதோா
கொலைவி லாலெயி லெய்த கொடியவன
நிலையி ஞாவயல் சூழ்திரு நினறியூர்
உரையி ஞலதொழு வார்வினை யோயுமே. அ

அஞசி யாகிலு மனபுபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநினறி யூரைநீ
இஞ்சி மாமதி லெயதிமை யோாதொழக்
குஞசி வானபிறை சூடிய கூத்தனே. ௯

எளிய ஞமொழி யாவிலங் கைககிறை
களியி ஞற்கயி லாய மெடுத்தவன
நெளிய வூனறவல் லானமா நினறியூா
அளியி ஞறறெழு வாாவினை யலகுமே. க0

திருச்சிறறம்பலம

---

## திருவொற்றியூா - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம

ஒற்றி யூரு மொளிமதி பாமபினை
ஒற்றி யூருமப் பாமபும அதனையே
ஒறறி யூா வொருசடை வைத்தவன
ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே. க

வாட்ட மொனறுரைக குமமலை யானமகள்
ஈட்ட வேயிரு ளாடி யிடுபிணக

காட்டி லோரி கடிக்க எடுத்ததோர்
ஓட்டை வெண்டலைக் கையொற்றி யூரரே. ௨

கூற்றுத் தண்டத்தை யஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கு மானடி
நீற்றுத் தண்டத்த ராய்வினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போலொற்றி யூரரே. ௩

சுற்றும் பேய்சுழ லச்சுடு காட்டெரி
பற்றி யாடுவர் பாய்புலித் தோலினர்
மற்றை யூர்களெல் லாம்பலி தேர்ந்துபோய்
ஒற்றி யூர்புக் குறையு மொருவரே. ௪

புற்றில் வாளர வாட்டி யுமையொடு
பெற்ற மேறுகந் தேறும் பெருமையான்
மற்றை யாரொடு வானவ ருந்தொழ
ஒற்றி யூருறை வானோர் கபாலியே. ௫

போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீ
மாது தாழ்சடை வைத்த மணாளனார்
ஓது வேதிய னாதிரு வொற்றியூர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. ௬

பலவும் அன்னங்கள் பன்மலர் மேல்துஞ்சும்
கலவ மஞ்ஞைகள் காரென வெள்குறும்
உலவு பைம்பொழில் சூழ்திரு வொற்றியூர்
நிலவி னானடி யேயடை நெஞ்சமே. ௭

ஒன்று போலும் உகந்தவ ரேறிற்று
ஒன்று போலு முமைத்துக் களைந்தது
ஒன்று போலொளி மாமதி சூடிற்று
ஒன்று போலுகந் தாரொற்றி யூரரே. ௮

படைகொள் பூதத்தர் வேதத்தர் கீதத்தர்
சடைகொள் வெள்ளத்தர் சாந்தவெண் ணீற்றினர்
உடையுந் தோலுகந் தாருறை யொற்றியூர்
அடையு முள்ளத் தவர்வினை யலகுமே. ௯

வரையி னூலுயா தோளுடை மன்னனை
வரையி னார்வலி செற்றவா வாழ்விடம்
திரையி னார்புடை சூழ்திரு வொற்றியூர்
உரையி னாறபொலிந் தாருயர்ந் தாரகளே. க0

திருச்சிற்றம்பலம

---

## திருப்பாசூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மூந்தி மூவெயி லெய்த முதல்வனா
சிந்திப் பாரவினை தீர்த்திடுஞ் செல்வனா
அந்திக் கோனதனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. க

மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போககிடுஞ் சோதியார்
கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தா பாசூ ரடிகளே. உ

நாறு கொன்றையும் நாகமுந் திங்களும
ஆறுஞ் செஞ்சடை வைத்த அழகனார்
காறு கண்டத்தர் கையதோர் சூலததா
பாறி னோட்டினர் பாசூ ரடிகளே. ௩

வெற்றி யூருறை வேதிய ராவர்நல்
ஒற்றி யேறுகந் தேறு மொருவனா
நெற்றிக் கண்ணினர் நீளர வநதனைப்
பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. ௪

மட்ட விழ்ந்த மலாநெடுங் கண்ணிபால்
இட்ட வேட்கைய ராகி யிருப்பவர்
துட்ட ரேலறி யேனிவா சூழ்ச்சிமை
பட்ட நெற்றியா பாசூ ரடிகளே. ௫

பல்லில் ஓடுகை யேந்திப் பகலெலாம்
எல்லி நின்றிடு பெய்பலி யேற்பவர்

சொல்லிப் போய்ப்புகு மூரறி யேனசொலீர்
பல்கு நீற்றினர் பாசூ ரடிகளே. சு

கட்டி விட்ட சடையர் கபாலியர்
எட்டி நோக்கிவந் தில்புகுந் தவ்வவா
இட்ட மாவறி யேனிவர் செய்வன
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. எ

வேத மோதிவந் தில்புகுந் தாரவர்
காதில் வெண்குழை வைத்த கபாலியார்
நீதி யொன்றறி யாரிறை கொண்டனர்
பாதி வெண்பிறைப் பாசூ ரடிகளே. அ

சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன மூசெரு தேறு மொருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே. கூ

மாலி னோடு மறையவன் றானுமாய்
மேலுங் கீழு மளப்பரி தாயவர்
ஆலின் கீழ லறம்பகர்ந் தாமிகப்
பால்வெண் ணீற்றினர் பாசூ ரடிகளே. க0

திரியும் மூஎயில் செங்கணை யொன்றினால்
எரிய எய்தன ரேனு மிலங்கைக்கோன்
நெரிய ஊன்றியிட் டாரவ ரொன்றினால்
பரியர் நுண்ணியர் பாசூ ரடிகளே. கக

திருச்சிற்றம்பலம்.

---

## திருவன்னியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

காடு கொண்டரங் காகக்ங்குல் வாய்க்கணம்
பாட மாநட மாடும் பரமனார்
வாட மாநிறங் கொள்வர் மணங்கமழ்
மாட மாமதில் சூழ்வன்னி யூரரே. க

செங்கண் நாகம் அரையது தீததிரள
அங்கை யேந்திநின றெரி யாடுவா
கங்கை வாாசடை மேலிடங் கொண்டவர்
மங்கை பாகமவைத் தார்வனனி யூரரே. ௨

ஞானங் காட்டுவர் நனனெறி காட்டுவா
தானங் காட்டுவா தம்மடைந தாரக்கெலாம
தானங் காட்டிததன தாளடைந் தாாகட்கு
வானங் காட்டுவா போலவனனி யூரரே. ௩

இம்மை அமமை யெனவிரண் டும்மிவை
மெய்மமை தானறி யாது விளம்புவா
மெய்ம்மை யால்நினை வார்கள்தம் வலவினை
வம்மின நீர்ப்பாகண் டாவனனி யூரரே. ௪

பிறைகொள் வாள்நுதற் பெய்வளைத் தோளியா
நிறையைக் கொள்பவா நீறணி மேனியா
கறைகொள் கண்டத்தா வெண்மழு வாளினர்
மறைகொள் வாய்மொழி யாாவனனி யூரரே. ௫

திளைகரும் வண்டொடு தேன்படு கொனறையா
துளைககை வேழத்தா தோலா சுடர்மதி
முளைக்கு மூரற கதிாகண்டு நாகம்நா
வளைக்கும் வாாசடை யார்வனனி யூரரே. ௬

குணங்கொள் தோளெட்டு மூாத்தி யிணையடி
இணங்கு வார்கட் கினியனு மாயநின்றான
வணங்கி மாமலா கொண்டவர் வைகலும்
வணங்கு வாாமனத் தார்வனனி யூரரே. ௭

இயலு மாலொடு நான்முகன செய்தவம்
முயலிற காண்பரி தாய்நினற மூாததிதான
அயலெ லாமனன மேயுமந் தாமரை
வயலெ லாங்கயல் பாய்வனனி யூரரே. ௮-௯

நலஙகொள் பாகனை நனறு முனிந்திடா
விலங்கல் கோத்தெடுத் தானது மிககிட
இலங்கை மன்ன னிருபது தோளினை
மலங்க வூன்றிவைத தாாவனனி யூரரே. ௧௦

திருச்சிற்றம்பலம

# திருவையாறு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்தை வாய்தலு ளானவந்து சீரியன
பொந்து வார்புலால் வெண்டலை கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பரை யாறரே. க

பாகம் மாலை மகிழ்ந்தனர் பால்மதி
போக ஆனையி னீருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக ஆனநெயஞ் சாடுமை யாறரே. உ

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மெனபதோர் வான்சுழிப் பட்டுநான
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சுந் தோனற அருளுமை யாறரே. ௩

நினைக்குமா நெஞ்சினுள் ளாநெடு மாமதில்
அனைத்தும் ஒள்ளழல் வாயெரி யூட்டினார்
பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
அனைத்து வாய்தலுள ளாருமை யாறரே. ௪

பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடல ராடல ரனறியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. ௫

புலரும் போது மிலாப்பட்ட பொற்சுடர்
மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்
இலரும் போது மிலாதது மன்றியும்
அலரும் போதும அணியுமை யாறரே. ௬

பஙக மாலைக் குழலியொர் பால்நிறக்
கங்கை மாலையர் காதன்மை செய்தவர்
மஙகை மாலை மதியமுங கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. ௭

முனனை யாறு முயனறெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்
மனனை யாறு மருவிய மாதவன்
தனனை யாறு தொழத்தவ மாகுமே. அ

ஆனை யாறென ஆடுகின ரூன்முடி
வானை யாறு வளாயது காண்மினோ
நான்ஐ யாறுபுக கேற்கவ னினனருள்
தேனை யாறு திறந்தாலே யொக்குமே. கூ

அரககின மேனியன் அந்தளிர் மேனியன
அரக்கின சேவடி யாளஞ்ச அஞசலென
றாக்க னீரைந்து வாயு மலறவே
அரககி னனடி யாலுமை யாறனே. க0

திருச்சிற்றம்பலம்

---

## திருவையாறு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல போல்வதோர்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. க

மூல வண்ணத்த ராய்முத லாகிய
கோல வண்ணத்த ராகிக் கொழுஞசுடர்
நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்
கால வண்ணத்த ராவரை யாறரே. உ

சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்
அந்திப் போதழ காகிய வண்ணமும்
பந்திக் காலனைப் பாய்ந்ததொா வண்ணமும்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. ௩

இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்
சுருளின வண்ணமுஞ் சோதியின வண்ணமும்

மருளு நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமு மாவரை யாறரே. ச

இழுக்கின வண்ணங்க ளாகிய வெவ்வழல்
குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்
மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்
அழைக்கும் வண்ணமு மாவரை யாறரே. ரு

இண்டை வண்ணமு மேழிசை வண்ணமும்
தொண்டா வண்ணமுஞ் சோதியின வண்ணமும்
கண்ட வண்ணங்க ளாய்க்கனல் மாமணி
அண்ட வண்ணமு மாவரை யாறரே. சு

விரும்பும் வண்ணமும் வேதத்தின வண்ணமும்
கரும்பின் இனமொழிக் காரிகை வண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவரை யாறரே. எ

ஊழி வண்ணமு மொண்சுடர் வண்ணமும்
வேழ ஈருரி போர்த்ததோர் வண்ணமும்
வாழித் தீயுரு வாகிய வண்ணமும்
ஆழி வண்ணமு மாவரை யாறரே. அ

செய்த வன்திரு நீறணி வண்ணமும்
எய்த நோக்கரி தாகிய வண்ணமும
கைதுு காட்சி யரியதோர் வண்ணமும்
ஐது வண்ணமு மாவரை யாறரே. கூ

எடுதத வாளாக கனதிறல் வண்ணமும்
இடாககள் போற்பெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்
அடுத்த வண்ணமு மாவரை யாறரே. க0

திருச்சிற்றம்பலம்

---

## திருவாவடுதுறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை
மறைக்க வாலிய ளல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெருமபுன லாவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. ௧

தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை
அளவு கண்டில ளாவடு தண்டுறைக்
களவு கண்டன ளொத்தனள் கன்னியே ௨

பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி யாவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. ௩

காக்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொண் மென்முலை சேர்ந்திறு மாந்திவள்
ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்
தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே. ௪

கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேயெனும் பண்பினன்
அருகு சென்றில ளாவடு தண்டுறை
ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே, ௫

குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினன்
அழக னாவடு தண்டுறை யானெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. ௬

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை
மஞ்ச னேடிவ ளாடிய மையலே. ௭

பிறையுஞ் சூடிநற பெண்ணோ டாணாகிய
நிறையும் நெஞ்சமும் நீரமையுங் கொண்டவன
அறையும பூம்பொழி லாவடு தண்டுறை
இறைவ னென்னை யுடையவ னென்னுமே. அ

வையந் தானளந் தானும் அயனுமாய
மெய்யைக் காணலுற றார்ககழ லாயினன
ஐய னாவடு தண்டுறை யாவெனக
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. ௯

பககம பூதங்கள் பாடப பலிகொள்வான
மிக்க வாளரக் கனவலி வீட்டினன
அக்க ணிந்தவ னாவடு தண்டுறை
நகக னென்னுமிந் நாணிலி காண்மினே. ௧0

திருச்சிற்றம்பலம்

## திருப்பராய்த்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம

கரப்பர் கால மடைந்தவா தம்வினை
சுருகக மாறுவல் லாகங்கை செஞசடைப்
பரப்பு நீரவரு காவிரித் தெனகரைத்
திருப்ப ராய்ததுறை மேவிய செல்வரே. ௧

மூடி னாகளி யானையின ஈருரி
பாடி னார்மறை நானகினோ டாறங்கம்
சேட னார்தெனப ராய்த்துறைச் செல்வரைத்
தேடிக கொண்டடி யேனசென று காண்பனே. உ

பட்ட நெற்றியர் பால்மதிக கீற்றினா
நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமும
சிட்ட னார்தென்ப ராய்ததுறைச் செல்வனார்
இட்ட மாயிருப் பாரை யறிவரே. ௩

முனபெ லாஞ்சில மோழைமை பேசுவர்
எனபெ லாம்பல பூண்டங் குழிதர்வர்

தெனப ராய்த்துறை மேவிய செல்வனார்
அன்ப ராயிருப் பாரை யறிவரே. ௫

போது தாதொடு கொண்டு புனைந்துடன
தாத விழ்சடைச் சஙகரன பாதத்துள்
வாதை தீரகவென றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே. ௬

நல்ல நானமறை யோதிய நமபனைப்
பல்லில் வெண்டலை யிற்பலி கொள்வனைத்
தில்லை யானைதென பராய்த்துறைச் செல்வனை
வல்லை யாயவணங் கித்தொழு வாய்மையே. ௭

நெருப்பி னுற்குவித் தாலொக்கு நீள்சடைப்
பருப்ப தம்மத யானை யுரித்தவன்
திருப்ப ராய்த்துறை யாதிரு மாாபின நூல
பொருப்ப ராவி யிழிபுனல் போனறதே. ௮

எட்ட விட்ட விடுமண லெககாமேல்
பட்ட நுண்துளி பாயும் பராய்த்துறைச்
சிட்டன சேவடி சென்றடை கிறறீரேல்
விட்டு நம்வினை யுள்ளன வீடுமே. ௯

நெருப்ப ராய்நிமிாந் தாலொக்கு நீள்சடை
மருப்ப ராய்வளைந் தாலொக்கும வாண்மதி
திருப்ப ராயத்துறை மேவிய செல்வனார்
விருப்ப ராயிருப் பாரை யறிவரே. ௧

தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்
இண்டை கட்டி யிணையடி யேத்தியும்
பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. ௧௦

அரக்க னுற்ற லழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மனனு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேததுமின்
பொருக்க நும்வினை போயறுங் காண்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருவானைக்கா - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கோனைக் காவிக் குளிர்ந்த மனத்தராய்த்
தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்
ஆனைக் காவிலெம் மானை யணைகிலார்
ஊனைக் காவி யுழிதர்வ ரூமரே. ௧

திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. ௨

துன்ப மின்றித் துயரின்றி யென்றுநீர்
இன்பம் வேண்டி லிராப்பக லேத்துமின்
என்பொன் ஈச னிறைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடும் ஆனைக்கா வண்ணலே. ௩

நாவால் நன்று நறுமலர்ச் சேவடி
ஓவா தேத்தி யுளத்தடைத் தார்வினை
காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்
ஆவா என்றிடும் ஆனைக்கா வண்ணலே. ௪

வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொ லின்றி விலகுமின் வீடுற
நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கெலாம்
அஞ்ச லென்றிடும் ஆனைக்கா வண்ணலே. ௫

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. ௬

ஒழுகு மாடத்து ளொன்பது வாய்தலுங்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளால் தூமலர் தூவிநின்
றழும வர்க்கன்ப னானைக்கா வண்ணலே. ௭

உருளும் போதறி வொண்ணு வுலகத்தீர்
தெருளுஞ சிகெனத தீவினை சேராதே
இருள றுததுநின றீசனென பாரக்கெலாம்
அருள்கொ டுததிடும் ஆனைககா வண்ணலே. ௮

நேச மாகி நினைமட நெஞசமே
நாச மாய குலநலஞ சுறறங்கள்
பாச மறறுப் பராபர ஆனந்த
ஆசை யுற்றிடும் ஆனைக்கா வண்ணலே. ௯

ஓத மாகடல சூழிலங் கைககிறை
கீதங் கினனரம பாடக கெழுவினை
பாதம் வாஙகிப பரிந்தருள் செய்தங்கோ
ஆதி யாயிடும் ஆனைககா வண்ணலே. ௧௦

திருச்சிற்றம்பலம

---

## திருப்பூந்துருத்தி - திருக்குறுந்தொகை

திருசசிறறமபலம்

கொடிகொள் செல்வ விழாககுண லைஅருக்
கடிகொள் பூமபொழிற கச்சியே கமபனுர்
பொடிகள பூசிய பூநதுருத திநகா
அடிகள சேவடிக கீழ்நா மிருப்பதே. ௧

ஆர்தத தோலுடை கட்டியோர் வேடனுய்ப்
பார்த்த னேடு படைதொடு மாகிலும்
பூத்த நீள்பொழிற் பூந்துருத் திந்கர்த்
தீரத்தன சேவடிக கீழ்நா மிருப்பதே. ௨

மாதி னைமதித் தாளொரு பாகமாக்
காத லாற்கரந் தானசடைக் கங்கையைப்
பூத நாயகன பூநதுருத் திநகர்க
காதி சேவடிக கீழ்நா மிருப்பதே. ௩

மூவ னையமுத லாயிவ வுலகெலாம்
காவ னைக்கடுங் காலனைக் காய்ந்தவன்

பூவின் நாயகன் பூந்துருத் திந்நகர்த்
தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௪

செம்பொ னேயொக்கும் மேனியன் தேசத்தில்
உம்ப ராரவ ரோடங் கிருக்கிலும்
பொன்பொனூ செல்வப் பூந்துருத் திந்நகர்
நம்பன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௫

வல்லம் பேசி வலிசெய்மூன் றூரினைக்
கொல்லம் பேசிக் கொடுஞ்சரம் நூறினன்
புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச்
செல்வன் சேவடிக் கீழ்நா மிருப்பதே ௬

ஒருத்த னுயுல கேழுந் தொழநின்று
பருத்த பாம்பொடு பாலமதி கங்கையும்
பொருத்த னாகிலும் பூந்துருத் திந்நகர்த்
திருத்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௭

அதிரர் தேவ ரியக்கர் விச்சாதரர்
கருத நின்றவர் காண்பரி தாயினன்
பொருத நீரவரு பூந்துருத் திந்நகர்ச்
சதுரன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௮

செதுக ருமனத் தார்புறங் கூறினும்
கொதுக ருக்கணி ஞேனடிகள் கூறினும்
பொதுவி னையகன் பூந்துருத் திந்நகர்க்
கதிபன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. ௯

துடித்த தோள்வலி வாளரக் கன்றனைப்
பிடித்த கைஞ்ஞெரிந் தூற்றன கண்ணெலாம்
பொடிக்க வூன்றிய பூந்துருத் திந்நகர்ப்
படிகொள் சேவடிக் கீழ்நா மிருப்பதே ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருச்சோற்றுத்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொல்லை யேற்றினர் கோளர வத்தினா
ரில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே
வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. க

முத்தி யாக வொருதவஞ் செய்திலை
அத்தி யாலடி யார்க்கொன் றளித்திலை
தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே
பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. உ

ஒட்டி நின்ற உடலுறு நோய்வினை
கட்டி நின்ற கழிந்தவை போயறத்
தொட்டு நின்றுமச் சோற்றுத் துறையர்க்கே
பட்டி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. ௩

ஆதியா னண்ட வாணர்க் கருள்நல்கு
நீதி யானென்றும் நின்மல னேயென்றும்
சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
வாதி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. ௪

ஆட்டி னையடி யேனவினை யாயின
ஓட்டி னாயொரு காதி லிலங்குவெண்
தோட்டி னாயென்று சோற்றுத் துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே. ரு

பொங்கி நின்றெழுந் தகடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே ௬

ஆணி போலநீ ஆற்ற வலியைகாண்
ஏணி போலிழிந் தேறியு மேங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. எ

பெறற மேறிலென பேய்படை யாகிலென
புற்றி லாடர வேயது பூணிலென
சுறறி நீயென்றுஞ சோறறுத் துறையாக்கே
பறறி நீபணி செயமட நெஞசமே. ௮

அல்லி யானர வைந்தலை நாகணைப்
பளளி யானறி யாத பரிசெலாம்
சொலலி நீயெனறுஞ சோறறுத் துறையர்கசே
புல்லி நீபணி செயமட நெஞசமே. ௯

மிண்ட ரோடு விரவியும் வீறிலாக்
குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ
தொண்டு செய்தெனறுஞ் சோற்றுத துறையர்க்கே
உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. ௧௦

வாழ்ந்த வனவலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போயல றவ்விர லூனறினை
சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்
தாழ்ந்து நீபணி செய்மட நெஞசமே. ௧௧

திருச்சிறறம்பலம

---

## திருநெய்த்தானம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம

கொல்லி யானகுளிர் தூங்குகுற் றாலத்தான
புல்லி யார்புரம மூனறெரி செய்தவன
நெல்லி யானிலை யானநெய்த தானனைச்
சொல்லி மெயதொழு வார்சுடர் வாணரே. ௧

இரவ னையிடு வெண்தலை யேந்தியைப்
பரவ னைப்படை யாமதில மூனறையும்
நிரவ னைநிலை யானநெய்த தானனைக
குரவ னைத்தொழு வாரகொடி வாணரே. ௨

ஆனிடை யைந்தும் ஆடுவ ராரிருள்
கானிடை நடம் ஆடுவர் காண்மினோ

தேனிடை மலர் பாயுநெய்த் தானனை
வானி டைத்தொழு வாவலி வாணரே. ௩

விண்ட வர்புர மூன்றும்வெண் ணீறெழக்
கண்ட வனகடி தாகிய நஞ்சினை
உண்ட வனொளி யானநெய்த் தானனைத்
தொண்ட ராய்த்தொழு வாசுடர் வாணரே. ௪

முனைகை நோவக் கடைந்தவா னிறகவே
சங்கி யாது சமுத்திர நஞ்சுண்டான
நஙகை யோடு நவினறநெயத் தானனைத
தஙகை யால்தொழு வாதலை வாணரே. ௫

சுட்ட நீறுமெய் பூசிச சுடலையுள்
நட்ட மாடுவா னள்ளிருள் பேயொடே
சிட்டா வானவா தேருநெய்த் தானனை
இட்ட மாய்த்தொழு வாரினப வாணரே. ௬

கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்
கள்ளிக காட்டிடை யாடுவர் காண்மினோ
தெள்ளித் தேறித் தெளிந்துநெயத் தானனை
உள்ளத தால்தொழு வாருமபா வாணரே. ௭

உச்சி மேல்விளங கும்மிள வெண்பிறை
பற்றி யாடர வோடுஞ்ச டைப்பெய்தான
நெற்றி யாரழல கண்டநெய்த் தானனைச்
சுற்றி மெய்தொழு வாசுடர் வாணரே. ௮

மாலொ டும்மறை யோதிய நானமுகன
காலொ டும்முடி காண்பரி தாயினான
சேலொ டுஞ்செருச் செய்யுநெய்த் தானனை
மாலொ டுந்தொழு வார்வினை வாடுமே. ௯

வலிந்த தோள்வலி வாளரக் கனறனை
நெருங்க நீள்வரை யூன்றுநெய்த் தானனார்
புரிந்து கைந்நரம் போடிசை பாடலும்
பரிந்த னைப்பணி வாரவினை பாறுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருப்பழனம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அருவ னாய்அத்தி யீருரி போர்த்துமை
உருவ னாயொற்றி யூர்பதி யாகிலும்
பருவ ரால்வயல் சூழ்ந்த பழனத்தான்
திருவி னாற்றிரு வேண்டுமித் தேவர்க்கே. க

வையம் வந்து வணங்கி வலங்கொளும்
ஐய னையறி யார்சிலா ஆதர்கள்
பைகொ ளாடர வார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே. உ

வண்ண மாக முறுக்கிய வாசிகை
திண்ண மாகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணு மாகவே பாடும் பழனத்தான்
எண்ணும் நீர்அவ னாயிர நாமமே. ௩

மூர்க்கப் பாம்பு பிடித்தது மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்டு துணிமதி
பாக்கப் பாம்பினைப் பற்றும் பழனத்தான்
தாக்கொண் மாலை சடைக்கணிந் திட்டதே. ௪

நீல முண்ட மிடற்றின னேந்தர்தோர்
கோல முண்ட குணத்தால் நிறைந்ததோர்
பாலு முண்டு பழனன்பா லெனனிடை
மாலு முண்டிறை யென்றன மனத்துளே. ரு

மந்த மாக வளர்பிறை சூடியோர்
சந்த மாகத் திருச்சடை சாத்துவான்
பந்த மாயின தீர்க்கும் பழனத்தான்
எந்தை தாய்தந்தை யெம்பெரு மானுமே. சா

மார்க்க மொன்றறி யாமதி யில்லிகள்
பூக்க ரத்திற் புரிகிலா மூடர்கள்
பார்க்க நின்று பரவும் பழனத்தான்
தாள்கள் நின்று தலைவணங் கார்களே. எ

ஏறி னாரிமை யோர்கள் பணிகண்டு
தேறு வாரலர் தீவினை யாளர்கள்
பாறி னாப்பணி வேண்டும் பழனத்தான்
கூறி னானுமை யாளொடுங் கூடவே. ௮

சுற்று வார்தொழு வார்சுடர் வண்ணன்மேல்
தெற்றி னார்திரி யும்புரம் மூன்றெய்தான்
பற்றி னார்வினை தீர்க்கும் பழனனை
எற்றி னான்மறக் கேனெம் பிரானையே ௯

பொங்கு மாகடல் சூழிலங் கைக்கிறை
அங்க மான இறுத்தருள் செய்தவன்
பங்க னென்றும் பழன னுமையொடும்
தங்கன் தாளடி யேனுடை யுச்சியே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருச்செம்பொன்பள்ளி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கான றாத கடிபொழில் வண்டினம்
தேன றாத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன றாததோர் வெண்டலை யிற்பலி
தான றாததோர் கொள்கையன் காண்மினே. ௧

என்பு மாமையும் பூண்டங் குழிதர்வார்க்
கன்பு மாயிடும் ஆயிழை யீரினிச்
செம்பொன் பள்ளியு ளானசிவ லோகனை
நம்பொன் பள்ளியுள் கவினை நாசமே. ௨

வேறு கோலத்த ராணலர் பெண்ணலர்
ஈறு கோவண வைத்தகி லாடையர்
தேற லாவதொன் றன்றுசெம் பொன்பள்ளி
ஆறு சூடிய அண்ண லவனையே. ௩

அருவ ராததோர் வெண்டலை யேந்திவந்
திருவ ராயிடு வார்கடை தேடுவார்

தெருவெ லாமுழல் வார்செம்பொன பள்ளியா
ஒருவா தாம்பல பேருளர் காண்மினே. ௪

பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினன்
ஏவ லாலெயின் மூனறு மெரித்தவன்
தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன பள்ளியான்
மூவ ராய்முத லாய்நின்ற மூர்த்தியே. ௫

சலவ ராயொரு பாம்பொடு தண்மதிக்
கலவ ராவதின் காரண மெனகொலோ
திலக நீண்முடி யாரசெம்பொன பள்ளியார்
குலவில் லாலெயில் மூனறெய்த கூத்தரே. ௬

கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர்
மைகொள் கண்டத்த ராகி யிருசுடர்
செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி
ஐயர் கையதோ ரைந்தலை நாகமே. ௭

வெங்கண் நாகம் வெருவுற ஆர்த்தவர்
பைங்கண் ஆனையி னீருரி போர்த்தவர்
செங்கண் மால்விடை யாரசெம்பொன பள்ளியார்
அங்க ணயடைந் தார்வினை தீர்ப்பரே. ௮

நன்றி நாரணன நானமுக னனறிவர்
நின்ற நீணமுடி யோடடி காண்புறறுச்
சென்று காண்பரி யானசெம்பொன பள்ளியான
நின்ற சூழலில் நீளெரி யாகியே. ௯

திரியும் மும்மதில செங்கணை யொன்றினால்
எரிய வெய்தன லோட்டி யிலங்கைக்கோன
நெரிய வூனறியிட் டாரசெம்பொன பள்ளியார்
அரிய வான மவரருள் செய்வரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருக்கடவூர்வீரட்டம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டாகட வூரரே. க

வெள்ளி மால்வரை போலவதோ ரானையார்
உள்ள வாறெனை யுள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானைகண் டாகட வூரரே. உ

ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன வானை யுரித்துமை யஞ்சவே
கான லானைகண் டீர்கட வூரரே. ங

ஆல முண்டழ காயதோ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டாகட வூரரே. ச

அளித்த ஆன்அஞ்சு மாடிய வானையார்
வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்
எளித்த வேழத்தை எள்குவித் தானையார்
களித்த வானைகண் டீர்கட வூரரே. ரு

விடுத்த மால்வரை விண்ணுற வானையார்
தொடுத்த மால்வரை தூயதோ ரானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுத்த வானைகண் டீர்கட வூரரே. சா

மண்ணு ளாரை மயக்குறு மானையார்
எண்ணு ளார்பல ரேத்திடு மானையார்
விண்ணு ளார்பல ரும்மறி யானையார்
கண்ணு ளானைகண் டீர்கட வூரரே. எ

சினக்குஞ் செமபவ னதிர னானையா
மனகரும் வல்வினை தீர்த்திடு மானையார்
அனைகரும் அன்புடை யாரமனத் தானையார
கனைகரு மானைகண் டீரகட வூரரே. அ

வேத மாகிய வெஞ்சுட ரானையா
நீதி யானில னாகிய வானையார
ஓதி யூழி தெரிந்துண ரானையார்
காத லானைகண் டீரகட வூரரே. கூ

நீணட மாலொடு நானமுகன் தானுமாய்க்
காணடு மெனறுபுக கார்க ளிருவருமம
மாண்ட வாரழ லாகிய வானையார
காண்ட லானைகண் டீரகட வூரரே. கய

அடுத்து வநத இலஙகையர் மனனனை
எடுதத தோள்க ளிறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார
கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கடவூர்மயானம் - திருக்குறுந்தொகை

திருச்சிறறம்பலம்

குழைகொள காதினா கோவண ஆடையர்
உழையர் தாஙகட வூரின் மயானத்தார
பழைய தம்மடி யாரசெய்த பாவமும்
பிழையுந் தீர்ப்பா பெருமா னடிகளே. க

உனனி வானவ ரோதிய சிந்தையில்
கனனல் தேனகட வூரின மயானத்தார்
தனனை நோக்கித் தொழுதெழு வார்கடகெலாம்
பினனை யெனனா பெருமா னடிகளே. உ

சூல மேந்துவர் தோலுடை ஆடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்

கால காலா கடவூா மயானத்தா
மாலை மாாபா் பெருமா னடிகளே. ௩

இறைவ னாிமை யோாதொழு பைஙகழல்
மறவ ஞர்கட வூரின மயானததா
அறவ னாடி யாரடி யார்தங்கள
பிறவி தீாப்பா பெருமா னடிகளே. ௪

கத்து காளி கதநதணி விததவா
மத்தா தாஙகட வூரின மயானத்தா
ஒத்தொவ வாதன செயதுழல வாரொரு
பித்தா காணும பெருமா னடிகளே. ௫

எாிகொள மேனி யிளமபிறை வைத்தவா்
கரியா் தாங்கட வூரின மயானத்தார்
அாிய ரண்டத்து ளோரயன மாலுக்கும
பெரியா காணும் பெருமா னடிகளே. ௬

அணங்கு பாகத்தா் ஆரண நானமறை
கணஙகள் சோகட வூரின மயானத்தா
வணங்கு வாரிடா தீாப்பா் மயகுறும்
பிணங்கொள காடா பெருமா னடிகளே. ௭

அரவு கையின ராதி புராணனா்
மரவு சேர்கட வூரின மயானத்தா
பரவு வாரிடா தீர்ப்பா பணிகொள்வா
பிரமன மாற்கும் பெருமா னடிகளே. (அ-௧-௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருமயிலாடுதுறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ள முள்கி யுரைக்குந் திருப்பெயா
வள்ளல் மாமயி லாடு துறையுறை
வெள்ளந் தாஙகு சடையனை வேண்டியே. ௧

சித்தந் தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை தீரும்மென் பைங்கொடி பால்மதி
வைத்த மாமயி லாடு துறையனை
கொத்தி னிற்பொலி கொன்றை கொடுக்கிலே. ௨

அண்டர் வாழ்வும் அமர ரிருக்கையும
கண்டு வீற்றிருக குங்கருத தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன
தொண்டர் பாதங்கள் சூடத் துணையிலே. ௩

வெஞ்சி னக்கடுங காலனை விரைகிலான
அஞ்சி றப்பும் பிறப்பும் அறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறையுறை
அஞ்சொ லாளுமை பங்க னருளிலே. ௪

குறைவி லோங்கொடு மாடு வாழ்க்கையால்
கறைநி லாவிய கண்டனெண் தோளினன்
மறைவ லானமயி லாடு துறையுறை
இறைவனை நீள்கழ லேத்தி யிருக்கிலே. ௫

நிலைமை சொல்லுநெஞ் சேதவ மெனசெய்தாய்
கலைகள் ஆயவல லானகயி லாயநன
மலையன் மாமயி லாடு துறையனநம
தலையின் மேலும் மனத்துளுந் தங்கவே. ௬

நீற்றி னன்நிமிர் புனசடை யானவிடை
ஏற்றி னன்நமை யாளுடை யானபுலன
மாற்றி னன்மயி லாடு துறையென்று
போற்று வாரகுமுன் டோபுவி வாழ்க்கையே. ௭

கோலும் புல்லு மொருகையிற கூர்ச்சமும
தோலும் பூண்டு துயரமுற் றெனபயன
நீல மாமயி லாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணாந் தோர்கட்கே. ௮

பணங்கொ ளாடர வல்குற பகீரதி
மணங்கொ ளச்சடை வைத்த மறையவன

வணங்கு மாமயி லாடு துறையரன
அணங்கொர் பால்கொண்ட கோல மழகிதே. ௯

நீணி லாஅர வச்சடை நேசனைப்
பேணி லாதவா பேதுற வோட்டினேனும்
வாணி லாமயி லாடு துறைதனைக
காணி லாக்குங் கடுந்துய ரில்லையே. ௧௦

பருத்த தோளும முடியும் பொடிபட
இருத்தி னானவ னின்னிசை கேட்டலும்
வரத்தி னான்மயி லாடு துறைதொழ
காத்தி னாவினைக் கட்டறுங காண்மினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கழிப்பாலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள்
எண்ணி நாமங்க ளோத்தி நிறைந்திலள
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
அண்ண லேயறி வானிவள் தன்மையே. ௧

மருந்து வானவ ருய்யநஞ் சுண்டுகந்
திருந்த வன்கழிப் பாலையு ளெம்பிரான்
திருந்து சேவடி சிந்தையுள் வைத்திவள்
பரிந்து ரைக்கிலு மென்சொற் பழிக்குமே. ௨

மழலை தான்வரச் சொல்தெரி கின்றிலள்
குழலின நேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலையெம மண்ணலே
இகழ்வ தோவெனை யேன்றுகொ ளென்னுமே. ௩

செய்ய மேனிவெண் ணீறணி வான்றனை
மைய லாகி மதிக்கில ளாரையும்
கைகொள் வெண்மழு வன்கழிப் பாலையெம்
ஐய னேயறி வானிவள் தன்மையே. ௪

கருத்த னைக்கழிப் பாலையுள் மேவிய
ஒருத்த னைஉமை யாளொரு பங்கனை
அருத்தி யாற்சென்று கண்டிட வேண்டுமென
றொருத்தி யாருள மூசல தாடுமே. ரு

கங்கை யைசசடை வைதது மலைமகள
நங்கை யையுட னேவைத்த நாதனார்
திங்கள் சூடி திருககழிப் பாலையான
இங்கு வந்திடு மெனறிறு மாககுமே. சு

ஐய னேயழ கேயன லேந்திய
கைய னேகறை சோதரு கண்டனே
மைய லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
ஐய னேவிதி யேயரு ளென்னுமே. எ

பததா கட்கமு தாய பரததினை
முத்த னைமுடி வொனறிலா மூததியை
அத்த னையணி யார்கழிப் பாலையெம்
சித்த னைச்செனறு சேருமா செப்புமே. அ-கூ

பொனசெய் மாமுடி வாளரக கன்தலை
அஞ்சு நானகுமொன் றும்மிறுத் தானவன்
எனசெ யானகழிப் பாலையு ளெம்பிரான
துஞ்சும் போதும துணையென லாகுமே. க0

திருச்சிற்றம்பலம்

## திருப்பைஞ்ஞீலி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

உடையர் கோவண மொன்றுங் குறைவிலர்
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லவாக கில்லை அவலமே. க

மத்த மாமலா சூடிய மைந்தனார்
சித்த ராய்த்திரி வார்வினை தீர்ப்பரால்

பத்தர் தாந்தொழு தேத்துபைஞ் ஞீலியெம்
அத்த னைத்தொழ வல்லவர் நல்லரே. ௨

விழுது சூலத்தன வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருள் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே. ௩

ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்துபைஞ் ஞீலியுள்
என்றும் மேவி யிருந்த அடிகளே. ௪

வேழத் தின்னுரி போர்த்த விகிர்தனார்
தாழச் செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
தாழைத் தண்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
யாழின் பாட்டை யுகந்த அடிகளே. ௫

குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்
கண்டங் காரவயல் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
அண்ட வாண னடியடைந் துய்ந்தனே. ௬

வரிப்பை யாடர வாட்டி மதகரி
உரிப்பை மூடிய வுத்தம னுறை
திருப்பைஞ் ஞீலி திசைதொழு வார்கள்போய்
இருப்பர் வானவ ரோடினி தாகவே. ௭

கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்
பேடு மாணும் பிறரறி யாததோர்
ஆடு நாக மசைத்த அடிகளே. ௮

காரு லாமலர்க் கொன்றையந் தாரினன்
வாரு லாமுலை மங்கையோர் பங்கினன்
தேரு லாம்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
ஆகி லாவமு தையடைந் துய்ம்மினே. ௯

தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட அருளும்எம் மானிடம்
இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே ௧௰

திருச்சிற்றம்பலம்

---

## திருவேட்களம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்று மின்பந் தழைக்க விருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே. ௧

கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ் செற்றவன்
விருப்பன் மேவிய வேட்களங் கைதொழத்
திருப்ப னாகி லெனக்கிட ரில்லையே. ௨

வேட்க ளத்துறை வேதிய னெம்மிறை
ஆக்க ளேறுவ ரானஞ்ச மாடுவார்
பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றினால்
காப்ப ரெம்மைக் கறைமிடற் றண்ணலே. ௩

அல்ல லில்லை அருவினை தானில்லை
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வ னார்திரு வேட்களங் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே. ௪

துன்ப மில்லைத் துயரில்லை யாமினி
நம்ப னாகிய நன்மணி கண்டனார்
என்பொ னாருறை வேட்களம் நன்னகர்
இன்பன் சேவடி யேத்தி யிருப்பதே. ௫

கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்நீர்

சிட்ட ஞாதிரு வேட்களங் கைதொழப்
பட்ட வல்வினை யாயின பாறுமே. சு

வட்ட மெனமுலை யாளுமை பங்கனா
எட்டு மொனறு மிரண்டுமூன் றுயினார்
சிட்டா சோதிரு வேட்களங கைதொழு
திட்ட மாகி யிருமட நெஞசமே. எ

நட்ட மாடிய நம்பனை நாளதொறும்
இட்டத் தாலினி தாக நினைமினோ
வட்ட வாமுலை யாளுமை பஙகனா
சிட்ட ஞாதிரு வேட்களந் தனனையே. அ

வட்ட மாமதில் மூனறுடை வல்லரண்
சுட்ட கொள்கைய ராயினுஞ சூழ்ந்தவா
குட்ட வல்வினை தீாக்குங் குளிாவிககும்
சிட்டா பொற்றிரு வேட்களச செலவரே. கூ

சேட னுருறை யுஞசெழு மாமலை
ஓடி ஆஙகெடுத் தானமுடி பததிற
வாட ஊனறி மலரடி வாங்கிய
வேட னுருறை வேட்களஞ் சோமினே. கo

திருசசிற்றமபலம்

---

## திருநல்லம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொல்லத் தானநம ஞாதமா வநதககால்
இல்லத் தாாசெயய லாவதெ னேழைகாள்
நல்லத் தானநமை யாளுடை யானகழல்
சொலலத தானவல்லி ரேல்துயா தீருமே. க

பொககம் பேசிப் பொழுது கழியாதே
துககந தீர்வகை சொல்லுவன கேண்மினோ
தக்கன வேள்வி தகர்த்த தழல்வண்ணன
நக்கன சோநல்லம் நண்ணுதல நனமையே. உ

பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்
பணிகள் மேவிப் பயனில்லை பாவிகாள்
அணுக வேண்டி லானநெறி யாவது
நணுகு நாதன நகர்திரு நல்லமே. ௩

தமக்கு நல்லது தமமுயிர் போயினால்
இமைக்கும போது மிராதிக் குரமபைதான
உமைக்கு நல்லவன றானுறை யும்பதி
நமக்கு நல்லது நல்ல மடைவதே. ௪

உரை தளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிடம் நலலமே
பரவு மினபணி மினபணி வாரொடே
விரவு மினவிர வாரை விடுமினே. ௫

அல்ல லாகஐம பூதஙக ளாட்டினும
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்லம் மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைபபகை வீடுமே ௬

மாத ராரொடு மககளுஞ் சுறறமும
பேத மாகிப் பிரிவதன முனனமே
நாதன மேவிய நல்லம நகாதொழப
போது மினனெழு மினபுக லாகுமே. ௭

வெம்மை யான வினைககடல் நீங்கிநீா
செமமை யாய சிவகதி சேரலாம
சும்மை யாரமலா தூவித் தொழுமினோ
நம்மை யாளுடை யானிடம் நல்லமே. ௮

கால மான கழிவதன முன்னமே
ஏலு மாறு வணங்கிநின றேத்துமின
மாலும் மாமல ரானொடு மாமறை
நாலும வல்லவா கோனிடம நலலமே. ௯

மல்லை மல்கிய தோளரக கனவலி
ஒல்லை யில்லொழித் தானுறை யும்பதி
நல்ல நலல மெனுமபெயா நாவினால்
சொல்ல வல்லவா தூநெறி சோவரே. ௰

திருசசிறறம்பலம

## திருஆமாத்தூர் - திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத் தேடியுங் காண்கிலர் தாள்முடி
ஆமாத் தூரர னேயரு ளாயென்றென்
றேமாப் பெய்திக்கண் டாரிறை யானையே. க

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும்
அந்தி யானை ஆமாத்தூ ரழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே. உ

காமாத் தம்மெனுங் காவலைப் பட்டுநான்
போமாத் தையறி யாது புலம்புவேன்
ஆமாத் தூரர னேயென் றழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத் தித்திக்குமே. ங

பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானு மாமாத்தூ ரழகனை
நெஞ்சி னால்நினைந் தேன்நினை வெய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே. ச

குராமன் னுங்குழ லாளொரு கூறனார்
அராமன் னுஞ்சடை யான்திரு வாமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் யீசனை
நிராம யன்றனை நாளும் நினைமினே. ரு

பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்
அத்த னையணி யாமாத்தூர் மேவிய
முத்தி னையடி யேனுள் முயறலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. சு

நீற்றி னார்திரு மேனியன் நேரிழை
கூற்றி னன்குழற் கோலச் சடையிலோர்
ஆற்றி னனணி யாமாத்தூர் மேவிய
ஏற்றி னனமை யாளுடை யீசனே. எ

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்
கண்ணித் தாகு மமுதினை யாமாத்தூர்
சண்ணிப் பானைத் தமர்க்கணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் னானவன் காண்மினே. ௮

குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்ட ரோடென்னை வேறு படுத்துய்யக்
கொண்ட நாதனைக் குளிர்புனல் வீரட்டத்
தண்ட னாரிட மாமாத்தூர் காண்மினே. ௯

வானஞ் சாடு மதியர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய வாமாத்தூ ரையனே. ௧௦

விட்டிலை யாய்விலங் கல்லெடுத் தான்முடி
அட்ட வோர்விர லூன்றிய வாமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக் கென்னுளம்
இடம தாக்கொண் டினிதுறத் திருப்பனே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருத்தோணிபுரம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாதி யன்று மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சொல நீயெனக் காரொனும்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி யாவனா னென்னுமென் தையலே. ௧

நக்கம் வந்து பலியிடென் றாக்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத்
தக்க தன்று தமது பெருமைக்கே. ௨

கெண்டை போல்நய னத்திம வான்மகள்
வண்டு வார்குழ லாளுட னாகவே

துண்ட வானபிறைத் தோணி புரவரைக
கண்டு காமுறு கின்றனள் கனனியே. ௫

பாலை யாழ்மொழி யாளவள தாழ்சடை
மேல வாவது கண்டனள் விண்ணுறச்
சோலை யாாதரு தோணி புரவாக்குச்
சால நல்லளா கின்றனள் தையலே. ௪

பண்ணின நேர்மொழி யாள்பலி யிட்டவிப்
பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது
சுண்ண மாடிய தோணிபு ரத்துறை
அண்ண லாருககுச சால அழகிதே. ௫

முல்லை வெண்நகை மொய்குழ லாயுனக்
கல்ல றுவ தறிந்திலை நீகனித்
தொலலை யாரபொழில் தோணி புரவாக்கே
நல்லை யாயிடு கினறனை நங்கையே. ௬

ஒனறு தானறி யாருல கத்தவா
நினறு சொலலி நிகழ்ந்த நினைப்பிலா
துனறு வாரபொழில தோணி புரவர்தம்
கொனறை சூடுங குறிபபது வாகுமே. ௭

உறவு பேயககண பூணபது வெண்தலை
உறைவ தீமம் உடலிலோா பெண்கொடி
துறைக ளார்கடல் தோணி புரததுறை
இறைவ னாககிவ ளெனகண்டன பாவதே. ௮

மாக யானை மருப்பேர் முலையினா
போக யானு மவள்புக்க தேபுகத்
தோகை சேர்தரு தோணி புரவாகசே
ஆக யானு மவர்க்கினி யாளதே. ௯

இட்ட மாயின செய்வாளென பெண்கொடி
கட்டம் பேசிய காரரக கனறனைத்
துட்ட டக்கிய தோணி புரத்துறை
அட்ட மூர்த்திக்கு அனபது வாகியே. ௧௦

திருச்சிற்றம்பலம

## திருப்புகலூர் - திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

துன்னக் கோவணச் சுண்ணவெண் ணீறணி
பொன்னனக் கன்ன சடைப்புக லூரரோ
மின்னனக் கன்னவெண் திங்களைப் பாம்புடன்
என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே. ௧

இரைகடும் பாம்பு மெறிதரு திங்களும்
நுரைகடுங் கங்கையும் நண்ணிய செஞ்சடைப்
புரைப்பி லாத பொழிற்புக லூரனை
உரைக்கு மாசொல்லி யொளவளை சோருமே. ௨

ஊச லாம்அர வல்குலென் சோகுழல்
ஏச லாம்பழி தந்தெழில் கொண்டனர்
ஓசொ லாய்மக ளேமுறை யோவென்று
பூசல் நாமிடு வோம்புக லூரர்க்கே. ௩

மின்னின் நேரிடை யாளுமை பங்கனைத்
தன்னை நேரொப் பிலாத தலைவனைப்
புன்னைக் கானற் பொழிற்புக லூரனை
என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. ௪

விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சுங்
கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனிற்
புண்ணி யன்புக லூருமென் னெஞ்சுமே. ௫

அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு
பண்டு நான்மறை யோதிய பாடலன்
தொண்ட ராகித் தொழுது மதிப்பவர்
புண்ட ரீகத்து ளார்புக லூரரே. ௬

தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலார்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன் தண்புக லூரனே. ௭

பெருங்கை யாகிப் பிளிறி வருவதோர்
கருங்கை யானைக் களிற்றுரி போர்த்தவர்
வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டாப்புக லூரரே. ௮

பொன்னொத் தநிறத் தானும் பொருகடல்
தன்னொத்த நிறத்த தானு மறிகிலாப்
புன்னைத் தாது பொழிற்புக லூரரை
என்னத் தாவென என்னிடர் தீருமே. ௯

மத்த னையமதி யானு மலைதனை
எத்தி னான்திரள் தோண்முடி பத்திற
ஒத்தி னானவிர லாலொருங் கேத்தலும்
பொத்தி னான்புக லூரைத் தொழுமினே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருவேகம்பம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
தொண்ட னாய்த்திரி யாயது வாதிரவே. ௧

கச்சி நாளும் நயந்தடி யார்தொழ
இச்சை யாலுமை நங்கை வழிபடக்
கொச்சை யார்குறு காச்செறி தீம்பொழில்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. ௨

ஊனி லாவி யியங்கி யுலகெலாம்
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்கவெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. ௩

இமையா முக்கண ரென்னெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணாத் தகைமையர்
இமையோ ரேத்த இருந்தவ னேகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. ௪

மருந்தி னோடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்
கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. ௫

பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலாக்
கருளு நன்மைதந் தாயவ ரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே. ௬

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வான்நமை நோய்வினை வாராமே
காக்கும் நாயகன் கச்சியே கம்பனே. ௭

பண்ணி லோசை பழத்தினி லின்சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. ௮

திருவி னாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாயுணர் வாயுணர் வல்லதோர்
கருவுள் நாயகன் கச்சியே கம்பனே. ௯

இடுகு நுண்ணிடை யேந்திள மென்முலை
வடிவின் மாதர் திறம்மனம் வையன்மின்
பொடிகொள் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்
அடிக ளெம்மை யருந்துயர் தீர்ப்பரே. ௧௦

இலங்கை வேந்த னிராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செல்வளித் தானெங்கள் நாதனே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருவேகம்பம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாமே தேவ ரெனாமை நடுக்குறத்
தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ அல்லற் படவடி யோங்களே. ௧

அருந்தி றல்அம ராஅயன மாலொடு
திருந்த நின்று வழிபடத் தேவியோ
டிருந்த வன்னெழி லார்கச்சி யேகம்பம
பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே ௨

கறைகொள் கண்டத்தெண் தோளிறை முக்கணன்
மறைகொள் நாவினன வானவர்க் காதியான
உறையும் பூம்பொழில் சூழ்கச்சி யேகம்பம்
முறைமை யாற்சென்று முந்தித் தொழுதுமே. ௩

பொறிப்பு லனகளைப் போககறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள
அறிப்பு றும்மமு தாயவ னேகம்பம்
குறிப்பி னாறசென்று கூடித் தொழுதுமே. ௪

சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்
புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்
எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே. ௫

சாக்கி யத்தொடு மற்றுஞ் சமண்படும்
பாக்கி யம்மிலார் பாடுசெ லாதுறப்
பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்
நாகொ டேத்தி நயந்து தொழுதுமே. ௬

மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை
ஆர்ப்ப தன்முன் னணியம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழி லேகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. ௭

ஆலு மாமயிற் சாயல்நல் லாரொடும்
சால நீயுறு மாலதவிர நெஞ்சமே
நீல மாமிடற் றண்ணலே கம்பனார்
கோல மாமலர்ப் பாதமே கும்பிடே. அ

பொய்ய னைதனையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய
கைய னைக்கச்சி யேகம்பம் மேவிய
ஐய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே ௯

அரக்கன் றனவலி யுன்னிக் கயிலையை
நெருக்கிச் சென்றெடுத் தானமுடி தோள்நெரித்
திரக்க இன்னிசை கேட்டவ னேகம்பம்
தருக்க தாகநாஞ் சார்ந்து தொழுதுமே. ௧0

திருச்சிற்றம்பலம்

---

## திருவெண்காடு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

**ப**ண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக
கண்காட் டிக்கண்ணி னில்நின்ற மணியொக்கும்
பெண்காட் டிப்பிறைச் சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே. ௧

கொள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடைநெஞ்சே. உ

ஊனோக் கும்இன்பம் வேண்டி யுழலாதே
வானோக் கும்வழி யாவது நின்மினோ
தானோக் குந்தன் னடியவர் நாவினில்
தேனோக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே. ௩

பருவெண் கோட்டுப் பைங்கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் றானுமை யஞ்சவே

பெருவெண் காட்டிறை வன்னுறை யுமமிடம்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே. ௪

பறற வனகங்கை பாம்பு மதியுடன
உற்ற வனசடை யானுயா ஞானங்கள்
கறற வனகய வாபுர மோரம்பால்
செற்ற வன்திரு வெண்கா டடைநெஞ்சே. ௫

கூடி னானுமை யாளொரு பாகமாய்
வேட னாய்விச யற்கருள் செய்தவன
சேட னாசிவ னார்சிந்தை மேயவெண்
காட னாடி யேயடை நெஞ்சமே. ௬

தரித்த வனகஙகை பாம்பு மதியுடன்
புரித்த புன்சடை யான்கய வர்புரம்
எரிதத வனமறை நானகினோ டாறஙகம்
விரித்த வனுறை வெண்கா டடைநெஞ்சே. ௭

பட்டம் இண்டை யவைகொடு பத்தர்கள்
சிட்ட னாதியென றுசிந்தை செய்யவே
நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நினற
அட்ட மூர்த்திதன வெண்கா டடைநெஞ்சே. ௮

ஏன வேடத்தி னானும் பிரமனும்
தான வேடமுன தாழ்ந்தறி கினறிலா
ஞான வேடன் விசயற் கருள்செயும்
கான வேடனறன வெண்கா டடைநெஞ்சே. ௯

பாலை யாடுவர் பனமறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. ௰

இராவ ணஞ்செய மாமதி பற்றவை
இராவ ணம்முடை யானறனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி யருள்செய்த
இராவ ணன்திரு வெண்கா டடைமினே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருவாய்மூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ. ௧

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனா ரதென்கொலோ. ௨

தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சே லுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூ ரடிகளே. ௩

கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்
ஒழியப் போந்திலே னொக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. ௪

ஒள்ளி யாரிவ ரன்றிமற் றில்லையென்
றுள்கி யுள்கி யுகந்திருந் தேனுக்குத்
தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க்
கள்ளி யாரவர் போலக் கரந்ததே. ௫

யாதே செய்துமி யாமலோ நீயென்னில்
ஆதே யேயு மளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூ மருவினார்
போதே யென்றும் புகுந்ததும் பொய்கொலோ. ௬

பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயென்று
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ. ௭

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைகொள் செஞ்சடை யாரிவர் பித்தரே. ௮

தனக்கே றாமை தவிர்கென்று வேண்டினும்
நினைத்தேன பொய்க்கருள் செய்திடு நின்மலன்
எனக்கே வந்தெதிர் வாய்மூருக் கேயென்னப்
புனற்கே பொற்கோயில் புக்கதும் பொய்கொலோ. ௯

தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தாரரக் கன்றனை
வேண்டிக்கொண் டேன்திரு வாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வனா னென்றலுந் தோன்றுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பாலைத்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக்
கோல மாமதி கங்கையுங் கூட்டினார்
சூல மானமழு ஏந்திச் சுடர்முடிப்
பால்நெய் யாடுவர் பாலைத் துறையரே. ௧

கவள மால்களிற் றின்உரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையோர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. ௨

மின்னின் நுண்ணிடைக் கன்னியர் மிக்கெங்கும்
பொன்னி நீர்மூழ்கிப் போற்றி யடிதொழ
மன்னி நான்மறை யோடுபல் கீதமும்
பன்னி னாரவர் பாலைத் துறையரே. ௩

நீடு காடிட மாய்நின்ற பேய்க்கணங்
கூடு பூதங் குழுமிநின் றார்க்கவே

ஆதி னாழ காகிய நானமறை
பாடி னாவா பாலைத துறையரே. ரு

சித்தா கனனியா தேவாகள் தானவா
பிததா நானமறை வேதியா பேணிய
அததனேநமை யாளுடை யாயெனும்
பத்தா கட்கனபா பாலைத துறையரே. ௬

விண்ணி னாபணிந தேத்த வியபபுறும்
மண்ணி னாமற வாதுசி வாயவென
றெண்ணி னாககிட மாஎழில் வானகம்
பண்ணி னாவர் பாலைத் துறையரே. ௭

குரவ னார்கொடு கொட்டியுங் கொக்கரை
விரவி னாபண் கெழுமிய வீணையும்
மருவு நாண்மலா மல்லிகை செண்பகம்
பரவு நீர்ப்பொனனிப் பாலைத துறையரே. ௭

தொடருந் தொண்டரைத் துககந் தொடர்ந்துவந்
தடரும் போதா னையருள் செய்பவர்
கடலின் நஞ்சணி கண்டர் கடிபுனல்
படருஞ் செஞ்சடைப் பாலைத துறையரே. அ

மேகந் தோய்பிறை சூடுவா மேகலை
நாகந் தோய்நத அரையினர் நல்லியல்
போகந் தோய்ந்த புணாமுலை மங்கையோா
பாகந் தோய்நதவர் பாலைத் துறையரே. ௯

வெங்கண் வாளரா வாட்டி வெருட்டுவர்
அங்க னாரடி யாாக்கருள நல்குவர்
செங்கண் மாலயன தேடற கரியவர்
பைங்க ணேற்றினா பாலைத் துறையரே. ௧௦

ஊரத்தி னலாக் கனனுயா மாமலை
நெருக்கி னனை நெரித்தவன பாடலும்
இரக்க மாஅருள் செய்தபா லைத்துறை
காத்தி னல்தொழு வார்வினை யோயுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## திருநாகேச்சரம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவார்
வல்லர் வல்வினை தீர்க்கும் மருந்துகள்
பல்லில் ஓடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போல்திரு நாகேச் சரவரே. க

நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்
மேவி வந்து வணங்கி வினையொடு
பாவ மாயின பற்றறு வித்திடும்
தேவர் போல்திரு நாகேச் சரவரே. உ

ஓத மாகட லின்விட முண்டவர்
ஆதி யாரய னோடம ராகெலாம்
மாதொர் கூறர் மழுவல னேந்திய
நாதர் போல்திரு நாகேச் சரவரே. ௩

சந்தி ரனொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லையர வின்பணி கொண்டருள்
மைந்தர் போல்மணி நாகேச் சரவரே. ௪

பண்டோர் நாளிகழ் வானப ழித்துத் தக்கனார்
கொண்ட வேள்விக் குமண்டை யதுகெடத்
தண்ட மாவிதா தாவின் தலைகொண்ட
செண்டர் போல்திரு நாகேச் சரவரே. ௫

வம்பு பூங்குழல் மாது மறுகவோர்
கம்ப யானை யுரித்த கரத்தினர்
செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை
நம்பர் போல்திரு நாகேச் சரவரே. ௬

மானை யேந்திய கையினர் மையறு
ஞானச் சோதிய ராதியர் நாமந்தான்
ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போல்திரு நாகேச் சரவரே. ௭

கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி
அழக ராலிழற் கீழற மோதிய
குழகர் போல்குளிர் நாகேச் சரவரே. ௮

வட்ட மாமதில் மூன்றுடன் வல்லரண்
சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்தருக் குளிர்விக்கும்
சிட்டர் போல்திரு நாகேச் சரவரே. ௯

தூர்த்தனைத் தோள்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத்தொ ருவிரல்
ஆர்த்து வந்தல கத்தவ ராடுமே
தீர்த்தர் போல்திரு நாகேச் சரவரே. ௧0

திருச்சிற்றம்பலம்

---

## திருஅதிகைவீரட்டம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கோணன் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. ௧

பண்ணி னேப்பவ ளத்திரள் மாமணி
அண்ண லையம ராதொழு மாதியைச்
சுண்ண வெண்பொடி யான்திரு வீரட்டம்
நண்ணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. ௨

உற்ற வாதம் உறுநோய் களைபவர்
பெற்ற மேறும் பிறங்கு சடையினர்
சுற்றும் பாய்புனல் சூழ்திரு வீரட்டம்
கற்கி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. ௩

முற்றா வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ

வில்தான் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்று லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௪

பல்லா ரும்பல தேவர் பணிபவர்
நல்லா ருந்நயந் தேத்தப் படுபவன்
வில்லால் மூவெயி லெய்தவன் வீரட்டம்
கல்லே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௫

வண்டார் கொன்றையும் மத்தமும் வார்சடைக்
கொண்டான் கோல மதியோ டரவமும்
விண்டார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
கண்டா லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௬

அரையார் கோவண ஆடைய னாறெலாந்
திரையா ரொண்புனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்குவீ ரட்டன்பால்
கரையே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௭

நீறு டைத்தடந் தோளுடை நின்மலன்
ஆறு டைப்புனல் பாய்கெடி லக்கரை
ஏறு டைக்கொடி யான்திரு வீரட்டம்
கூறி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. ௮

செங்கண் மால்விடை யேறிய செல்வனார்
பைங்க ணானையி னீருரி போர்த்தவர்
அங்கண் ஞாலம தாகிய வீரட்டம்
கங்கு லாகவென் கண்டுயில் கொள்ளுமே. ௯

பூணா ணாரம் பொருந்த வுடையவர்
நாணா கவ்வரை வில்லிடை யம்பினால்
பேணார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
காணே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௧௦

வரையார்ந் தவயி ரத்திரள் மாணிக்கம்
திரையார்ந் தபுனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்கிய வீரட்டம்
உரையே னாகிலென் கண்டுயில் கொள்ளுமே. ௧௧

உலந்தார் வெண்டலை உண்கல னாகவே
வலந்தான் மிக்கவவ வாளராக கனறினைச்
சிலம்பார் சேவடி யூனறினை வீரட்டம்
புலம்பே னாகிலென கண்துயில் கொள்ளுமே. கஉ

திருச்சிற்றம்பலம்

---

## திருஅதிகைவீரட்டம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எட்டு நாண்மலர் கொண்டவன சேவடி
மட்ட லரிடு வாரவினை மாயுமால்
கட்டித் தேனகலந தனன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருககே. க

நீள மாநினைந் தெண்மல ரிட்டவர்
கோள வல்வினை யுங்குறை விப்பரால
வாள மாலிழி யுங்கெடி லககரை
வேளி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. உ

கள்ளி னண்மல ரோரிரு நானகுகொண்
டுள்கு வாரவா வல்வினை யோட்டுவார்
தெள்ளு நீரவயல் பாயகெடி லக்கரை
வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. ௩

பூங்கொத தாயின மூனறொடோ ரைந்திட்டு
வாங்கி நின்றவா வல்வினை யோட்டுவார்
வீங்கு தண்புனல் பாய்கெடி லககரை
வேங்கைத் தோலுடை யாடைவீ ரட்டரே. ௪

தேனப் போதுகள் மூனறொடோ ரைந்துடன்
தானப் போதிடு வார்வினை தீர்ப்பவர்
மீனத் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேன லானை யுரித்தவீ ரட்டரே. ரு

ஏழித் தொனமலர் கொண்டு பணிந்தவர்
ஊழித் தொலவினை யோட அகறறுவார

பாழித் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேழத் தினுரி போர்த்தவீ ரட்டரே. ௬

உரைசெய நூல்வழி யொண்மல ரெட்டிட்ட
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. எ

ஒலி வண்டறை யொண்மல ரெட்டினால்
காலை யேத்த வினையைக் கழிப்பரால்
ஆலி வந்திழி யுங்கெடி லக்கரை
வேலி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. ௮

தாரித் துள்ளித் தடமல ரெட்டினால்
பாரித தேத்தவல் லார்வினை பாற்றுவார்
மூரித் தெண்திரை பாய்கெடி லக்கரை
வேரிச செஞ்சடை வேய்ந்தவீ ரட்டரே. ௯

அட்ட புட்ப மவைகொளு மாறுகொண்
டட்ட மூர்த்தி அனாதிதன் பாலணைந்
தட்டு மாறுசெய் கிற்பவ திகைவீ
ரட்ட னாடி சேரு மவர்களே. ௧0

திருச்சிற்றம்பலம்

## திருநாரையூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வீறு தானுடை வெற்பன மடந்தையோர்
கூற னாகிலுங் கூனபிறை சூடிலும்
நாறு பூம்பொழில் நாரையூ நம்பனுக்
காறு சூடலும் அம்ம அழகிதே. ௧

புள்ளி கொண்ட புலியுரி யாடையும
வெள்ளி கொண்டவெண் பூதிமெய் யாடலும்
நள்ளி தெண்டிரை நாரையூ ரானஞ்சை
அள்ளி யுண்டலு மம்ம வழகிதே. உ

வேடு தங்கிய வேடமும் வெண்டலை
ஓடு தங்கிய வுண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரானடம்
ஆடு மைங்கழ லம்ம வழகிதே. ௩

கொக்கின் தூவலுங் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்டலை மாலை விரிசடை
நக்க னாகிலும் நாரையூர் நம்பனுக்
கக்கி னாரமு மம்ம வழகிதே. ௪

வடிகொள் வெண்மழு மானமர் கைகளும்
பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்
கடிகொள் நன்மயில் சேர்திரு நாரையூர்
அடிகள் தம்வடி வம்ம வழகிதே. ௫

சூலம் மல்கிய கையுஞ் சுடரொடு
பாலும் நெய்தயி ராடிய பான்மையும்
ஞாலம் மல்கிய நாரையூர் நம்பனுக்
கால நீழலு மம்ம வழகிதே. ௬

பண்ணி னல்மறை பாடலொ டாடலும்
எண்ணி லார்புர மூன்றெரி செய்ததும்
நண்ணி னார்துயர் தீர்த்தலும் நாரையூர்
அண்ண லார்செய்கை யம்ம வழகிதே. ௭

என்பு பூண்டெரு தேறி யிளம்பிறை
மின்பு ரிந்த சடைமேல் விளங்கவே
நன்ப கற்பலி தேரினும் நாரையூர்
அன்ப னுக்கது வம்ம வழகிதே. ௮

முரலுங் கின்னர மொந்தை முழங்கவே
இரவி னின்றெரி யாடலு நீடலாம்
நரலும் வாரிநன் னாரையூர் நம்பனுக்
கரவம் பூணுத லம்ம வழகிதே. ௯

கடுக்கை யஞ்சடை யன்கயி லைம்மலை
எடுத்த வாளரக் கன்தலை யீரைஞ்சும்
நடுக்கம் வந்திற நாரையூ ரான்விரல்
அடுத்த தன்மையு மம்ம வழகிதே. ௰

திருச்சிற்றம்பலம்

## திருக்கோளிலி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மைக்கொள் கண்ணுமை பங்கினன் மானமழுத்
தொக்க கையினன் செய்யதோர் சோதியன்
கொக்க மாம்பொழில் சூழ்தரு கோளிலி
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. க

முத்தி னைமுத லாகிய மூர்த்தியை
வித்தி னைவிளை வாய விகிர்தனைக்
கொத்த லர்பொழில் சூழ்தரு கோளிலி
அத்த னைத்தொழ நீங்குமநம அல்லலே. உ

வெண்டி ரைப்பர வைவிட முண்டதோர்
கண்ட னைக்கலந் தார்தமக் கன்பனைக்
கொண்ட லம்பொழிற் கோளிலி மேவிய
அண்ட னைத்தொழு வார்க்கல்லல் இல்லையே. ங

பலவும் வல்வினை பாறும் பரிசினால்
உலவுங் கங்கையுந் திங்களு மொண்சடைக்
குலவி னானைக்குளி ரும்பொழிற் கோளிலி
நிலவி னானறனை நித்தல் நினைமினே. ச

அல்ல லாயின தீரு மழகிய
முல்லை வெண்முறு வல்லுமை யஞ்சவே
கொல்லை யானை யுரித்தவன் கோளிலிச்
செல்வன் சேவடி சென்று தொழுமினே. ரு

ஆவின் பால்கண் டளவி லருந்தவப்
பாலன் வேண்டலுஞ் செல்லென்று பாற்கடல்
கூவி னானைக்குளி ரும்பொழிற் கோளிலி
மேவி னானைத் தொழவினை வீடுமே. சா

சீர்த்த நன்மனை யாளுஞ் சிறுவரும்
ஆர்த்த சுற்றமும் பற்றிலை யாதலால்
கூத்த னாருறை யுந்திருக் கோளிலி
ஏத்தி நீர்தொழு மின்இடர் தீருமே. எ

மால தாகி மயங்கும் மனிதர்காள்
காலம் வநது கடைமுடி யாமுனம
கோல வாரபொழிற கோளிலி மேவிய
நீல கண்டனை நினறு நினைமினே. ௮

கேடு மூடிக கிடந்துண்ணு நாடது
தேடி நீதிரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி யீசனைப்
பாடு மினஇர வோடு பகலுமே. ௯

மடுத்து மாமலை யேந்தலுற் றானறனை
அடர்த்துப் பினனு மிரங்கி யவறகருள
கொடுத்த வனனுறை கோளிலி யேதொழ
விடுத்து நீஙகிடும மேலை வினைகளே. ௰

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கோளிலி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம

மூனன மேனினை யாதொழிந் தேனுனை
இனனம் நானுன சேவடி யேத்திலேன
செங்நெல் ஆரவயல் சூழ்திருக கோளிலி
மனன னேயடி யேனை மறவலே. ௧

விண்ணு ளாரதொழு தேத்தும் விளககினை
மண்ணு ளார்வினை தீரககும் மருந்தினைப்
பண்ணு ளாரபயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்ம்மினே. ௨

நாளும் நம்முடை நாள்க ளறிகிலோம்
ஆளும் நோய்களோ ரைமபதோ டாறெட்டும்
ஏழை மைப்பட் டிருந்துநீ நையாதே
கோளிலி யரன் பாதமே கூறுமே. ௩

விழவி னோசை யொலியறாத் தண்பொழில்
பழகி னாவினை தீரககும் பழமபதி

அழல்கை யான மருந்திருக் கோளிலிக்
குழக னாதிருப் பாதமே கூறுமே. ச

மூல மாகிய மூவர்க்கும் மூர்த்தியைக்
கால னாகிய காலற்குங் காலனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலிச்
சூல பாணிதன் பாதந் தொழுமினே. ரு

காற்ற னைக்கடல் நஞ்சமு துண்டவெண்
நீற்ற னைமிளிர் புன்சடை யண்ணலை
ஆற்ற னையம ருந்திருக் கோளிலி
ஏற்ற னாடி யேதொழு தேத்துமே. சு

வேத மாயவிண் ணோர்கள் தலைவனை
ஓதி மன்னுயி ரேத்து மொருவனைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. எ

நீதி யாற்றொழு வார்கள் தலைவனை
வாதை யான விடுக்கும் மணியினைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. அ

மாலும் நான்முக னாலு மறிவொணாப்
பாலின் மென்மொழி யாளொரு பங்கனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலி
நீல கண்டனை நித்தல் நினைமினே. கூ

அரக்க னாய இலங்கையர் மன்னனை
நெருக்கி யம்முடி பத்திறுத் தானவற்
கிரக்க மாகிய வன்றிருக் கோளிலி
அருத்தி யாயடி யேதொழு துய்ம்மினே. கo

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பழையாறைவடதளி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே. க

மூக்கி னால்முரன் றோதியக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூரறுத் தேதனக்
காக்கி னானணி யாறை வடதளி
நோக்கி னார்க்கில்லை யால்அரு நோய்களே. உ

குண்ட ரைக்குண மல்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந் தவிம லன்றனை
அண்ட ரைப்பழை யாறை வடதளிக்
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே. ௩

முடைய ரைத்தலை முண்டிக்கும் மொட்டரைக்
கடைய ரைக்கடிந் தார்கனல் வெண்மழுப்
படைய ரைப்பழை யாறை வடதளி
உடைய ரைக்குளிர்ந் துள்குமென் னுள்ளமே. ௪

ஒள்ள ரிக்கணார் முன்னமண் நின்றுணும்
கள்ள ரைக்கடிந் தகருப் பூறலை
அள்ள லம்புன லாறை வடதளி
வள்ள லைப்புக ழத்துயர் வாடுமே. ௫

நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழ வார்துயர் தீருமே. ௬

திரட்டி ரைக்கவ ளந்திணிக் குஞ்சமண்
பிரட்ட ரைப்பிரித் தபெரு மான்றனை
அருட்டி றத்தணி யாறை வடதளித்
தெருட்ட ரைத்தொழத் தீவினை தீருமே. ௭

ஓதி னத்தெழுத் தஞ்சுணர் வாசகமண
வேதி னைப்படுத் தான்வெங் கூற்றதை
பாத னைப்பழை யாறை வடதளி
நாத னைத்தொழ நம்வினை நாசமே. ௮

வாயி ருந்தமி ழேபடித் தாளுறு
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே ௯

செருத்த னைச்செயுஞ் சேனரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
அருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருமாற்பேறு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பொருமால் திண்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்தகு
திருமாற் பேறு தொழவினை தேயுமே. ௧

ஆலத் தாரிழ லில்லற நால்வர்க்குக்
கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்
மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத் தான்தொழு வார்க்கிட ரில்லையே. ௨

துணிவண் ணச்சுட ராழிகொள் வானெண்ணி
அணிவண் ணத்தலர் கொண்டடி யார்ச்சித்த
மணிவண் ணற்கருள் செய்தவன் மாற்பேறு
பணிவண் ணத்தவர்க் கில்லையாம் பாவமே. ௩

தீதவை செய்து தீவினை வீழாதே
காதல் செய்து கருத்தினில் நின்றநல்

மாத வாபயில் மாற்பேறு கைதொழப்
போது மினவினை யாயின போகுமே. ௪

வாரகொள மெனமுலை மங்கையொா பங்கினன்
வாரகொள் நனமுர சம்மறை யவவறை
வார்கொள் பைமபொழில் மாற்பேறு கைதொழு
வாரகள் மன்னுவா பொனனுல கத்திலே. ௫

பண்டை வலவினை பற்றறுக குமவகை
உண்டு சொல்லுவன கேண்மி னொளிகிளர்
வண்டு சோ.பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத தீருங் கவலையே. ௬

மழுவ லானதிரு நாமம மகிழ்நதுரைத்
தழுவ லாரகளுக கனபுசெய தினபொடும்
வழுவி லாவருள செய்தவன மாறபேறு
தொழுவ லாாதமக கில்லைத துயரமே. ௭

முன்ன வனனுல குககு முழுமணிப்
பொ"னன வனதிகழ் முதசொடு போகமாம்
மன்ன வனதிரு மாறபேறு கைதொழும்
அனன வரெமை யாளுடை யாரகளே. ௮

வேட னாய்விச யனனொடும் எய்துவெம்
காடு நீடுகந் தாடிய கண்ணுதல்
மாட நீடிய ருந்திரு மாறபேறு
பாடு வார்பெறு வாாபா லோகமே. ௯

கருத்த னாய்க்கயி லாய மலைதனைத்
தருக்கி னலெடுத் தானைத் தகரவே
வருததி யாரருள் செய்தவன மாறபேறு
அருததி யால்தொழு வார்ககில்லை யல்லலே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருமாற்பேறு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. க

அச்ச மில்லைநெஞ் சேயர னாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயறக்
கச்ச மாவிட முண்டகண் டாவென
வைச்ச மாநிதி யாவர்மாற் பேறரே. உ

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்கு ளருளுமாற் பேறரே. ௩

இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. ௪

சாற்றிச் சொல்லுவன் கேண்மின் தரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம்பொ னாவர்மாற் பேறரே. ௫

ஈட்டும் மாநிதி சால இழக்கினும்
வீட்டுங் காலன் விரைய அழைக்கினும்
காட்டில் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற்பேறரே. ௬

ஐய னேயர னேயென் றரற்றினால்
உய்ய லாமுல கத்தவர் பேணுவர்
செய்ய பாத மிரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. எ-அ-கூ

உந்திச் சென்று மலையை யெடுத்தவன
சந்து தோளொடு தாளிற வூன்றினை
மந்தி பாயபொழில சூழுமாற பேறென
அந்த மில்லதோ ரின்பம் அணுகுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருவரிசிற்கரைப்புத்தூர் - திருக்குறுந்தொகை

திருச்சிறறமபலம்

மூத்தா ரும்புனல் மொய்யரி சிறகரைப்
புத்தா ரனனடி போற்றியென பாரெலாம்
பொய்தத்தா ரும்புல னைந்தொடு புல்கிய
மைதத்தா ரும்வினை மாறறவும வல்லரே. ௧

பிறைகக ணிச்சடை யெம்பெரு மானெனறு
கறைக்க ணித்தவர் கண்ட வணக்கததாய்
உறகக ணித்துரு காமனத தாகளைப்
புறக்க ணித்திடும் புத்தூரப் புனிதரே. ௨

அரிசி லின்கரை மேலணி யாரதரு
புரிசை நந்திருப் புத்தூரப புனிதனைப்
பரிசொ டும்பர விபபணி வாரகெலாம்
துரிசில் நன்னெறி தோனறிடுங் காண்மினே. ௩

வேத னைமிகு வீணையில் மேவிய
கீத னைக்கிள ருந்நறுங கொனறையம்
போத னைப்புனல் சூழ்ந்தபுத் தூரனை
நாத னைநினைந் தென்மனம் நையுமே. ௪

அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச சோர்வினை விட்டுநல விட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிநதை செயச்செயக
கருப்புச சாறறிலும் அண்ணிக்குங் காண்மினே. ௫

பாம்பொ டுமதி யும்படா புனசடைப்
பூம்புன லும்பொ திந்தபுத் தூருளான

நாம்ப ணிந்தடி போற்றிட நாள்தொறும்
சாம்ப லென்பு தனக்கணி யாகுமே. ௬

கனல்அங் கைதனி லேந்திவெங் காட்டிடை
அனலங் கெய்திநின் றாடுவர் பாடுவர்
பினலஞ் செஞ்சடை மேற்பிறை யுந்தரு
புனலுஞ் சூடுவர் போலும்புத் தூரரே. ௭

காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு
நீற்றி னையணி வானினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே. ௮

முன்னும் முப்புரஞ் செற்றன ராயினும்
அன்ன மொப்பர் அலந்தடைந் தார்க்கெலாம்
மின்னு மொப்பர் விரிசடை மேனிசெம்
பொன்னு மொப்பர்புத் தூரெம் புனிதரே. ௯

செருத்த னல்தன தேர்செல வுய்த்திடும்
கருத்த னைக்கயி லையெடுத் தானுடல்
பருத்த தோள்கெடப் பாதத் தொருவிரல்
பொருத்தி னார்பொழி லார்ந்தபுத் தூரரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## கடுவாய்க்கரைத் திருப்புத்தூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கும்
அருத்த னையடி யேன்மனத் துள்ளமா
கருத்த னைக்கடு வாய்ப்புன லாடிய
திருத்த னைப்புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தேனே. ௧

யாவ ருமறி தற்கரி யான்றனை
மூவ ரின்முத லாகிய மூர்த்தியை
நாவி னல்லுரை யாகிய நாதனைத்
தேவனைப் புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தேனே. ௨

அன்ப னையடி யாரிடர் நீக்கியைச்
செம்பொ னைத்திக ழுந்திருக் கச்சியே
கம்ப னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நம்ப னைக்கண்டு நானுய்யப் பெற்றேனே. ௩

மாத னத்தைமா தேவனை மாறிலாக்
கோத னத்திலைந் தாடியை வெண்குழைக்
காத னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நாத னைக்கண்டு நானுய்யப் பெற்றேனே. ௪

குண்டு பட்டகுற் றந்தவிர்த் தென்னையாட்
கொண்டு நற்றிறங் காட்டிய கூத்தனைக்
கண்ட னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
அண்ட னைக்கண் டருவினை யற்றேனே. ௫

பந்த பாச மறுத்தெனை யாட்கொண்ட
மைந்த னைமண வாளனை மாமலர்க்
கந்த நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. ௬

உம்ப ரானை யுருத்திர மூர்த்தியை
அம்ப ரானை யமலனை யாதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பி ரானைக்கண் டின்பம தாயிற்றே. ௭

மாசார் பாச மயக்கறு வித்தென்னுள்
நேச மாகிய நித்த மணாளனைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென இன்பம தாயிற்றே. ௮

இடுவா ரிட்ட கவளங் கவர்ந்திரு
கடுவா யிட்டவர் கட்டுரை கொள்ளாதே
கடுவாய்த் தென்கரைப் புத்தூ ரடிகட்காட்
படவே பெற்றுநான் பாக்கியஞ் செய்தேனே. ௯

அரக்க னாற்ற லழித்தவன் பாடல்கேட்
டிரக்க மாகி யருள்புரி யீசனைத்
திரைக்கொள் நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
இருக்கு நாதனைக் காணப்பெற் றுய்ந்தேனே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருத்தென்குரங்காடுதுறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

இரங்கா வன்மனத் தார்க ளியங்குமுப்
புரங்கா வலழி யப்பொடி யாக்கினான்
தரங்கா டுந்தட நீர்ப்பொன்னித் தென்கரைக்
குரங்கா டுதுறைக் கோலக் கபாலியே. ௧

முத்தி னைமணி யைப்பவ ளத்தொளிர்
தொத்தி னைச்சுடர்ச் சோதியைச் சோலைசூழ்
கொத்த லர்குரங் காடு துறையுறை
அத்த னென்னண் ணித்திட் டிருந்ததே. ௨

குளிர்பு னற்குரங் காடு துறையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைநினைந் தேனுக்கென் னுள்ளமுந்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. ௩

மணவன் காண்மலை யாள்நெடு மங்கலக்
கணவன் காண்கலை ஞானிகள் காதலெண்
குணவன் காண்குரங் காடு துறைதனில்
அணவன் காண்அன்பு செய்யு மடியர்க்கே. ௪

ஞாலத் தார்தொழு தேத்திய நன்மையன்
காலத் தானுயிர் போக்கிய காலினன்
நீலத் தார்மிடற் றான்வெள்ளை நீறணி
கோலத் தான்குரங் காடு துறையனே. ௫

ஆட்டி னான்முன் அமணரொ டென்றனைப்
பாட்டி னான்றன பொன்னடிக் கின்னிசை
வீட்டி னான்வினை மெய்யடி யாரொடுங்
கூட்டி னான்குரங் காடு துறையனே. ௬

மாத்தன் தான்மறை யார்முறை யான்மறை
ஓத்தன் தாருகன் றன்னுயி ருண்டபெண்
போத்தன் தானவன் பொங்கு சினந்தணி
கூத்தன் தான்குரங் காடு துறையனே. ௭

நாடி நந்தம ராயின தொண்டர்காள்
ஆடு மின்அழு மின்தொழு மின்அடி
பாடு மின்பர மன்பயி லும்மிடம்
கூடு மின்குரங் காடு துறையையே. அ

தென்றல் நன்னெடுந் தேருடை யானுடல்
பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்
அன்று அந்தக னைஅயிற் சூலத்தால்
கொன்ற வன்குரங் காடு துறையனே. கூ

நற்ற வஞ்செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்ற நன்மொழி யாலருள் செய்தநல்
கொற்ற வன்குரங் காடு துறைதொழப்
பற்றுந் தீவினை யாயின பாறுமே. க௦

கடுத்த தேரக் கனகயி லைமலை
எடுத்த தோள்தலை யிற்றல றவ்விரல்
அடுத்த லும்மவ னின்னிசை கேட்டருள்
கொடுத்த வன்குரங் காடு துறையனே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கோழம்பம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வேழம் பத்தைவர் வேண்டிற்று வேண்டிப்போய்
ஆழம் பற்றிவீழ் வார்பல வாதர்கள்
கோழம் பத்துறை கூத்தன் குரைகழல்
தாழும் பத்தர்கள் சாலச் சதுரரே. க

கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யல்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்பம் மேயவெம்
உயிரி னையினைந் துள்ளம் உருகுமே. உ

வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்
தாழும் பான்மைய ராகித்தம் வாயினால்

தாழம் பூமணம் நாறிய தாழ்பொழில்
கோழம் பாவெனக் கூடிய செல்வமே. ௩

பாட லாகிடும் பண்ணின்று பெண்ணிவள்
கூட லாகிடுங் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் துளமகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே. ௪

தளிர்கொள் மேனியள் தானம்மை அஞ்சவோர்
பிளிறு வாரணத் தீருரி போர்த்தவன்
குளிர்கொள் நீர்வயற் கோழம்பம் மேவினான்
நளிர்கொள் நீர்சடை மேலு நயந்ததே. ௫

நாத ராவர் நமக்கும் பிறர்க்குந்தாம்
வேத நாவர் விடைக்கொடி யார்வெற்பில்
கோதை மாதொடுங் கோழம்பங் கோயில்கொண்
டாதி பாத மடையவல் லார்களே. ௬

முன்னை நான்செய்த பாவம் முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றதும்
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமா
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே. ௭

ஏழை மாரிடம் நின்றிரு கைக்கொடுங்
கோழை மாரொடுங் கூடிய குற்றமாங்
கூழை பாய்வயற் கோழம்பத் தானடி
ஏழை யேன்முன் மறந்தங் கிருந்ததே. ௮

அரவ ணைப்பயில் மாலயன் வந்தடி
பரவ னைப்பர மாம்பரஞ் சோதியைக்
குரவ னைக்குர வார்பொழிற் கோழம்பத்
தரவ னையொரு வர்க்குணர் வொண்ணுமே. ௯

சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாளுடை யார்களே. ௧௦

துட்ட னாகி மலையெடுத்த தன்திண்கீழ்ப்
பட்டு வீழ்ந்து படர்ந்துய்யப் போயினான்
கொட்டம் நாறிய கோழம்பத் தீசனென்
றிட்ட கீத மிசைத்த அரக்கனே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பூவனூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநூ றாயிர நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. ௧

என்னை யென்மனை யெந்தையை யென்னுயிர்
தன்னைத் தன்னடி யேன்றன மாகிய
பொன்னனைப் பூவனூர் மேவிய புண்ணியனை
இன்ன னென்றறி வொண்ணா னியற்கையே. ௨

குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்
மற்றுநீர் தீவினை செய்தன மாய்க்கலாம்
புற்ற ரவினன் பூவனூ ரீசன்பேர்
கற்று வாழ்த்துங் கழிவதன் முன்னமே. ௩

ஆவின் மேவிய ஐந்தமர்ந் தாடுவான்
தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்
மேவ னூல்விரி வெண்ணியின் தென்கரைப்
பூவ னூர்புகு வார்வினை போகுமே. ௪

புல்லம் ஊதியூர் பூவ னூர் பூம்புனல்
நல்ல மூர்திநல் லூர்நனி பள்ளியூர்
தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்
வல்ல மூரென வல்வினை மாயுமே. ௫

அனுச யப்பட் டதுவிது வென்னாதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்

புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரிற்றலை யான மனிதரே. ௬

ஆதி நாதன் அமரர்கள் அர்ச்சிதன்
வேத நாவன்வெற் பின்மடப் பாவையோர்
பாதி யானைப் பரந்த பெரும்படைப்
பூத நாதன்என் பூவனூர் நாதனே. ௭

பூவ னூர்தனைப் புறம்பயம் பூம்பொழில்
நாவ லூர்கள் ளாறொடு நன்னிலம்
கோவ லூர்குட வாயில் கொடுமுடி
மூவ லூருமுக் கண்ணனூர் காண்மினே. ௮

ஏவம் ஏது மிலாஅம ணேதலர்
பாவ காரிகள் சொல்லைப் பட்டுநான்
தேவ தேவன் திறநெறி யாகிய
பூவ னூர்புகு தப்பெற்ற நாளின்றே. ௯

நார ணனொடு நான்முக னிந்திரன்
வார ணன்கும ரன்வணங் குங்கழற்
பூர ணன்திருப் பூவனூர் மேவிய
கார ணன்னெனை யாளுடைக் காளையே. ௰

மைக்க டுத்த நிறத்தரக் கன்வரை
புக்கெ டுத்தலும் பூவனூ ரன்னடி
மிக்க டுத்த விரல்சிறி தூன்றலும்
பக்க டுத்தபின் பாடியுய்ந் தானன்றே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## திருவலஞ்சுழி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஓத மாகட லின்விட முண்டவன்
பூத நாயகன் பொற்கயி லைக்கிறை
மாதோர் பாகன் வலஞ்சுழி யீசனைப்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. ௧

கயிலை நாதனை கறுத்தவா முப்புரம்
எயில்கள் தீயெழ வெலவல வித்தகனை
மயில்க ளாலும வலஞ்சுழி யீசனைப்
பயில்கி லாசிலா பாவித் தொழுமபரே. ௨

இளைய காலமெம் மானை யடைகிலாத்
துளையி லாச்செவித் தொண்டர்காள நும்முடல்
வளையுங் காலம் வலஞ்சுழி யீசனைக்
களைக ணாகக கருதிநீ ருய்ம்மினே. ௩

நறைகொள் பூமபுனல் கொண்டெழு மாணிககாய்க்
குறைவி லாககொடுங் கூறறுதைத் திட்டவன
மறைகொள நாவன வலஞ்சுழி மேவிய
இறைவ னையினி யென்றுகொல் காண்பதே. ௪

விண்ட வாபுர மூனறு மெரிகொளத
திண்டி றற்சிலை யாலெரி செய்தவன்
வண்டு பண்முர லுந்தண் வலஞ்சுழி
அண்ட னுககடி மைத்திறத் தாவனே. ௫

படங்கொள் பாம்பொடு பானமதி யஞ்சடை
அடங்க வாழவல லானுமபா தம்பிரான
மடந்தை பாகன வலஞ்சுழி யானடி
அடைந்த வாககடி மைத்திறத தாவனே. ௬

நாக்கொண் டுபா வும்மடி யார்வினை
போக்க வல்ல புரிசடைப் புண்ணியன
மாக்கொள் சோலை வலஞ்சுழி யீசனறன்
ஏகொ ளப்புர மூனறெரி யானவே. ௭

தேடு வார்பிர மனதிரு மாலவா
ஆடு பாதம அவரு மறிகிலா
மாட வீதி வலஞ்சுழி யீசனைத்
தேடு வானுறு கினறதென சிந்தையே. ௮

கண்ப னிக்குங்கை கூப்புங்கண் மூன்றுடை
நண்ப னுக்கெனை நாளகொடுப் பேனெனும்

வண்பொன னிதழ்தன வலஞ்சுழி மேவிய
பண்ப னிபபொனைச செய்த பரிசிதே. க

இலங்கை வேந்த னிருபது தோளிற
நலங்கொள பாதத் தொருவிர லூன்றினை
மலங்கு பாய்வயல் சூழ்ந்த வலஞ்சுழி
வலங்கொள வாரடி யென்றலை மேலவே. கo

திருச்சிற்றம்பலம்

---

## திருவாஞ்சியம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

படையும பூதமும பாமபுமபுல வாயதள்
உடையுந தாங்கிய வுத்தம ஞாககிடம
புடைநி லாவிய பூமபொழில வாஞ்சியம
அடைய வல்லவாக கவலலொன றில்லையே. க

பறபைை யுமபசு வுமபடுத துபபல
திறதத வுமமுடை யோாதிக முமபதி
கறைப்பி றைசசடைக கண்ணுதல சேர்தரு
சிறப்பு டைத்திரு வாஞ்சியஞ சோமினே. உ

புற்றில் ஆடர வோடு புனல்மதி
தெற்று செஞ்சடைத் தேவபி ரானபதி
சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
பற்றிப் பாடுவார்க் குப்பாவ மில்லையே. ங

அங்க மாறும் அருமறை நானகுடன
தங்கு வேள்வியா தாம்பயி லுந்நகர்
செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
தங்கு வார்நம் அமரர்க் கமரரே. ச

நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை
ஆறு சூடும் அடிக ளுறைபதி
மாறு தானொருங் கும்வயல் வாஞ்சியம்
தேறி வாழ்பவாக் குச்செல்வ மாகுமே. ரு

அற்றுப் பற்றின்றி யாரைட மில்லவர்க்
குற்ற நற்றுணை யாவா னுறைபதி
தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. ௬

அருக்க னங்கி யமனொடு தேவர்கள்
திருத்துஞ் சேவடி யானறிக ழுங்கா
ஒருத்தி பாக முகந்தவன் வாஞ்சியம்
அருத்தி யாலடை வார்க்கில்லை யல்லலே. ௭-௮-௯-௧௦.

திருச்சிற்றம்பலம்

---

## திருநள்ளாறு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

உள்ளா றாததோர் புண்டரி கத்திரள்
தெள்ளா றாச்சிவ சோதித் திரளினைக்
கள்ளா றாதபொற் கொன்றை கமழ்சடை
நள்ளா றாவென நம்வினை நாசமே. ௧

ஆர ணப்பொரு ளாமரு ளாளனார்
வார ணத்துரி போர்த்தம ணாளனார்
நார ணனை நண்ணி யேத்துநள் ளாறனார்
கார ணக்கலை ஞானக் கடவுளே ௨

மேகம் பூண்டதோர் மேருவிற் கொண்டெயில்
சோகம் பூண்டழல் சோரத்தொட் டானவன்
பாகம் பூண்டமால் பங்கயத் தானொடு
நாகம் பூண்டுகூத் தாடுநள் ளாறனே. ௩

மலியுஞ் செஞ்சடை வாளர வம்மொடு
பொலியும் பூம்புனல் வைத்த புனிதனார்
நலியுங் கூற்றை நலிந்தநள் ளாறர்தம்
வலியுங் கண்டிறு மாந்து மகிழ்வனே. ௪

உறவ னாயிறைந் துள்ளங் குளிர்ப்பவன்
இறைவ னாகிநின் றெண்ணிறைந் தானவன்

நறவ னாறும் பொழிற்றிரு நள்ளாறன
மறவ ஞய்ப்பனறிப் பினசெனற மாயமே. ௫

செகக ரங்கழி செஞ்சுடாச் சோதியா
நககா ஙகா வாாததநள் ளாறனா
வக்க ரனுயிர் வவ்விய மாயறகுச
சகக ரமமருள் செய்த சதுரரே. ௬

வஞ்ச நஞசிற பொலிகினற கண்டததா
விஞைசை யிறசெல்வப் பாவைககு வேந்தனா
வஞ்ச நெஞ்சத தவாககு வழிகொடா
நஞ்ச நெஞ்சாக கருளுநள ளாறரே ௭

அல்ல னெனறு மலாககரு ளாயின
சொல்ல னெனறுசொல் லாமறைச சேதியான
வல்ல னெனறுமவல லாாவளம மிககவா
நலல னெனறுமநல லாாககுநள் ளாறனே. ௮

பாம்ப ணைப்பள்ளி கொண்ட பாமனும
பூம்ப ணைப்பொலி கினற புராணனும
தாமப ணிந்தளப பொண்ணுத் தனிததழல்
நாமப ணிந்தடி போறறுநள ளாறனே. ௯

இலஙகை மன்ன னிருபது தோளிற
மலஙக மாலவரை மேல்விரல் வைத்தவா
நலஙகொள் நீறறாநள் ளாறரை நாடொறும்
வலங்கொள் வாாவினை யாயின மாயுமே. ௧௦

திருசசிறறமபலம

---

## திருக்கருவிலிக்கோட்டிட்டை - திருக்குறுந்தொகை

திருச்சிறறமபலம

மட்டிட் டகுழ லார்சுழ லிலவலைப்
பட்டிட் டுமயங கிப்பரி யாதுநீர்
கட்டிட் டவினை போகக கருவிலிக
கொட்டிட் டையுறை வானகழல கூடுமே. ௧

ஞாலம் மல்கு மனிதர்காள் நாடொறும்
ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்
கால னார்வரு தன்முன் கருவிலிக்
கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௨

பங்க மாயின பேசப் பறைந்துநீர்
மங்கு மாநினை யாதே மலர்கொடு
கங்கை சேர்சடை யானுறை கருவிலிக்
கொங்கு வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௩

வாடி நீர்வருந் தாதே மனிதர்காள்
வேட னாய்விச யற்கருள் செய்தவெண்
காட னாருறை கின்ற கருவிலிக்
கோடு நீள்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௪

உய்யு மாறிது கேண்மி னுலகத்தீர்
பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்
கையி னானுறை கின்ற கருவிலிக்
கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. ௫

ஆற்ற வும்அவ லத்தழுந் தாதுநீர்
தோற்றுந் தீயொடு நீர்நிலந் தூவெளி
காற்று மாகிநின் றானுறை கருவிலிக்
கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே. ௬

நில்லா வாழ்வு நிலைபெறு மென்றெண்ணிப்
பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதில் சூழ்தண் கருவிலிக்
கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. ௭

பிணித்த நோய்ப்பிற விப்பிரி வெய்துமா
றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர
கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே. ௮

நம்பு வீரிது கேண்மின்கள் நாடொறும்
எம்பி ரானென்ன றிமையவ ரேத்துமே

கம்ப னூருறை கின்ற கருவிலிக்
கொம்ப னார்பயில் கொட்டிட்டை சேர்மினே. ௯

பாரு ளீரிது கேண்மின் பருவரை
பேரு மாறெடுத் தானை யடர்த்தவன்
காரகொள் நீர்வயல் சூழ்தண் கருவிலிக்
கூரகொள் வேலினன் கொட்டிட்டை சேர்மினே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கொண்டீச்சுரம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கண்ட பேச்சினிற் காளையர் தங்கள்பால்
மண்டி யேச்சுணும் மாதரைச் சேராதே
சண்டி யீச்சுர வர்க்கருள் செய்தவக்
கொண்டி யீச்சுர வன்கழல் கூறுமே. ௧

சுற்ற முந்துணை நன்மட வாளொடு
பெற்ற மக்களும் பேணலொ ழிந்தனர்
குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார்
பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. ௨

மாடு தானது இல்லெனின் மானுடர்
பாடு தான்செல்வா ரில்லைபன் மாலையாற்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே. ௩

தந்தை தாயொடு தார மெனுந்தளைப்
பந்தம் ஆங்கறுத் துப்பயில் வெய்திய
கொந்த விழ்பொழிற் கொண்டீச் சுரவனைச்
சிந்தை செய்மின் அவனடி சேரவே. ௪

கேளு மின்இளமையது கேடுவந்
தீளை யோடிரு மல்லது எய்தன்முன்
கோள ராவணி கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமின் நன்காகுமே. ௫

வெம்பு நோயும் இடரும வெறுமையும்
துனப முந்துய ரும்மெனுஞ சூழ்வினை
கொம்ப னாரபயில கொண்டீச் சரவனைப்
எம்பி ரானென வலலவாக கில்லையே. சு

அலல லோடரு நோயி லழுந்திநீர்
செல்லு மாநினை யாதே கனைகுரல
கொல்லை யேறுடைக கொண்டீச் சரவனை
வல்ல வாறு தொழவினை மாயுமே. எ

நாறு சாந்தணி நனமுலை மெனமொழி
மாறி லாமலை மஙகையொா பாகமாக
கூற னாருறை கொண்டீச சரநினைந
தூறு வார்தமக கூனமொன றில்லையே. அ

அயிலார் அம்பெரி மேருவில லாகவே
எயிலா ரும்பொடி யாய்விழ எயதவன
குயிலா ரும்பொழிற கொணடீச் சரவனைப்
பயில்வா ரும்பெரு மைபெறும் பாலரே. கூ

நிலையி னாவரை நினறெடுத் தானறனை
மலையி னாலடர்த் தவிறல் வாட்டினான
குலையி னார்பொழில் கொணடீச சரவனைத
தலையி னால்வணங் கத்தவ மாகுமே. க0

திருசசிறறமபலம்

---

## திருவிசயமங்கை - திருக்குறுந்தொகை

திருச்சிறறம்பலம்

குசையும அஙகையிற கோசக முங்கொண்டவன
வசையின மங்கல வாசகா வாழ்த்தவே
இசைய மங்கையுந் தானுமொன றாயினன்
விசைய மங்கையுள வேதியன காண்மினே. க

ஆதி நாத னடல்விடை மேலமா
பூத நாதன புலியத ளாடையன

வேத நாதனை விசயமங் கையுளான்
பாத மோதவல் லார்க்கில்லை பாவமே. ௨

கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்
வெள்ளி டைக்கருள் செய்விச யமங்கை
உள்ளி டத்துறை கின்ற வுருத்திரன்
கிள்ளி டத்தலை யற்ற தயனுக்கே. ௩

திசையு மெங்குங் குலுங்கத் திரிபுரம்
அசைய அங்கெய்திட் டாரழ லூட்டினான்
விசைய மங்கை விருத்தன் புறத்தடி
விசையின் மங்கி விழுந்தனன் காலனே. ௪

பொள்ள லாக்கை யகத்திலைம் பூதங்கள்
கள்ள மாக்கிக் கலக்கிய காரிருள்
விள்ள லாக்கி விசயமங் கைப்பிரான்
உள்ளம் நோக்கியென் னுள்ளுள் உறையுமே. ௫

கொல்லை யேற்றுக் கொடியொடு பொன்மலை
வில்லை யேற்றுடை யான்விச யமங்கைச்
செல்வ போற்றியென் பாருக்குத் தென்றிசை
எல்லை யேற்றலு மின்சொலு மாகுமே. ௬

கண்பல் உக்கக் கபாலம்அங் கைக்கொண்டு
உண்ப லிக்குழ லுத்தம னுள்ளொளி
வெண்பி றைக்கண்ணி யான்விச யமங்கை
நண்ப னைத்தொழப் பெற்றது நன்மையே. ௭

பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டும் நல்வரங் கொள்விச யமங்கை
ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்
காண்ட லேகருத் தாகி யிருப்பனே. ௮

வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்
சிந்தை யால்நினை வார்களைச் சிக்கெனப்
பந்து வாக்கி உய்யக்கொளுங் காண்மினே. ௯

இலங்கை வேந்த னிருபது தோளிற
விலஙகல் சேர்விர லானவிச யமங்கை
வலஞ்செய் வாரகளும வாழ்த்திசைப பார்களும்
நலஞ்செய் வாரவா நனனெறி நாடியே. ௧0

திருச்சிற்றம்பலம்

---

## திருநீலக்குடி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வைதத மாடும மனைவியும மககள்நீா
செதத போது செறியாா பிறிவதே
வித்த நீலக் குடியர னைந்நினை
சித்த மாகிற் சிவகதி சேர்திரே. ௧

செய்ய மேனியன தேனொடு பால்தயிா
நெய்ய தாடிய நீலக குடியரன்
மைய லாய்மற வாமனத தாக்கெலாம்
கையி லாமல ககனி யொக்குமே. ௨

ஆற்ற நீள்சடை ஆயிழை யாளொரு
கூற்றன மேனியிற கோலம தாகிய
நீற்றன நீலக் குடியுடை யானடி
போற்றி னாரிடர் போக்கும் புனிதனே. ௩

நாலு வேதியாக் கினனருள் நனனிழல்
ஆலன் ஆலநஞ் சுண்டகண் டத்தமர்
நீலன நீலக குடியுறை நின்மலன
கால னாருயிர் போககிய காலனே. ௪

நேச நீலக குடியர னேயெனா
நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால
ஈச னோசரம் எய்ய எரிந்துபோய்
நாச மானாா திரிபுர நாதரே. ௫

கொனறை சூடியைக குனற மகளொடும்
நின்ற நீலக குடியர னேயெனீா

என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர்
பொன்றும் போது நுமக்கறி வொண்ணுமே. ௬

கல்லி ஞேடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினுல்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே. ௭

அழகி யோமிளை யோமெனு மாசையால்
ஒழுகி ஆவி யுடல்விடு முன்னமே
நிழல தார்பொழில் நீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. ௮

கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்திங்கள்
பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்
நெற்றிக் கண்ணுடை நீலக் குடியரன்
சுற்றித் தேவர் தொழுங்கழற் சோதியே. ௯

தருக்கி வெற்பது தாங்கிய வீங்குதோள்
அரக்க னூருட லாங்கோர் விரலினுல்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும்
இரக்க மாயருள் செய்தன னென்பரே. ௰

திருச்சிற்றம்பலம்

---

## திருமங்கலக்குடி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

தங்க லப்பிய தக்கன் பெருவேள்வி
அங்க லக்கழித் தாருள் செய்தவன்
கொங்க லர்க்குழல் கொம்பனை யாளொடு
மங்க லக்குடி மேய மணாளனே. ௧

காவி ரியின் வடகரைக் காண்தகு
மாவி ரியும்பொ ழில்மங் கலக்குடித்
தேவ ரியும்பி ரமனுந் தேடொணுத்
தூவெ ரிச்சுடர்ச் சோதியுட் சோதியே. ௨

மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்க திர்ச்செல்வன விண்ணொடு மண்ணும்நேர்
சங்கு சக்கர தாரி சதுர்முகன
அங்க கத்திய னுமமர்ச்சித் தாரன்றே. ௩

மஞ்சன் வார்கடல் சூழ்மங் கலக்குடி
நஞ்ச மாரமு தாக நயந்துகொண்
டஞ்சு மாட லமர்ந்தடி யேனுடை
நெஞ்ச மாலய மாக்கொண்டு நின்றதே. ௪

செல்வம் மல்கு திருமங் கலக்குடி
செல்வம மல்கு சிவநிய மத்தராய்ச
செல்வம மல்கு செழுமறை யோர்தொழச்
செல்வன தேவியொ டுந்திகழ் கோயிலே. ௫

மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய
பின்னு வார்சடைப பிஞ்ஞகன தன்பெயர்
உன்னு வாரு முரைக்கவல் லார்களும்
துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. ௬

மாத ரார்மரு வும்மங் கலக்குடி
ஆதி நாயகன அண்டர்கள் நாயகன்
வேத நாயகன வேதியர் நாயகன
பூத நாயகன புண்ணிய மூர்த்தியே. ௭

வண்டு சேர்பொழில் சூழ்மங் கலக்குடி
விண்ட தாதையைத் தாளற வீசிய
சண்ட நாயக னுக்கருள் செய்தவன
துண்ட மாமதி சூடிய சோதியே. ௮

கூசு வாரலர் குண்டர் குணமிலா
நேச மேது மிலாதவர் நீசர்கள்
மாசர் பால்மங் கலக்குடி மேவிய
ஈசன் வேறு படுக்கவுய்ந் தேனன்றே. ௯

மங்க லக்குடி யானகயி லைம்மலை
அங்க லைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்
தங்க ரதமொடு தாள்தலை தோள்தகர்ந்
தங்க லைத்தழு தயர்ந்தனன் தானன்றே. ௧0

திருச்சிற்றம்பலம்

## திருஎறும்பியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

விரும்பி யூறு விடேல்மட நெஞ்சமே
கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்
இரும்பி னூறல் அறாததோர் வெண்டலை
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. ௧

பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசீர்க்
கறங்கு பூதக் கணமுடைக் கண்ணுதல்
நறுங்கு ழல்மட வாளொடு நாடொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. ௨

மருந்து வானவர் தானவர்க் கின்சுவை
புரிந்த புன்சடைப் புண்ணியன் கண்ணுதல்
பொருந்து பூண்முலை மங்கைநல் லாளொடும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. ௩

நிறங்கொள் கண்டத்து நின்மலன் எம்மிறை
மறங்கொள் வேல்கண்ணி வாள்நுதல் பாகமாய்
அறம்பு ரிந்தருள் செய்தவெம் அங்கணன்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. ௪

நறும்பொன் நாண்மலர்க் கொன்றையும் நாகமும்
துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்தவன்
உறும்பொன் மால்வரைப் பேதையோ ரோதொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. ௫

கறும்பி யூர்வன ஐந்துள காயத்தில்
திறம்பி யூர்வன மற்றும் பலவுள
குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை
எறும்பி யூரான் செய்த இயற்கையே. ௬

மறந்து மற்றிது பேரிடர் நாடொறும்
திறம்பி நீநினை யேல்மட நெஞ்சமே
புறஞ்செய் கோலக் குரம்பையில் விட்டெனை
எறும்பி யூரான் செய்த வியற்கையே. ௭

இன்ப முன்பிறப் பும்பிறப் பின்னொடு
துன்ப முன்முடன் வைத்த சோதியான்
அன்ப னேயர னேயென் றரற்றுவார்க்
கின்ப னாகு மெறும்பியூ ரீசனே. அ

கண்ணி றைந்த கன்பவ ளத்திரள்
விண்ணி றைந்த விரிசுடர்ச் சோதியான்
உள்நி றைந்துரு வாயுயி ராயவன்
எண்ணி றைந்த வெறும்பியூ ரீசனே. கூ

நிறங்கொள் மால்வரை ஊன்றி யெடுத்தலும்
நறுங்கு ழல்மட வாள்நடுக் கெய்திட
மறங்கொள் வாளரக் கன்வலி வாட்டினான்
எறும்பி யூர்மலை யெம்மிறை காண்மினே. ௰

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குரக்குக்கா - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மரக்கொக் காமென வாய்விட் டலறிநீர்
சரக்குக் காவித் திரிந்தய ராதுகால்
பரக்குங் காவிரி நீரலைக் குங்கரைக்
குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே. க

கட்டா றேகழி காவிரி பாய்வயல்
கொட்டா றேபுன லூறு குரக்குக்கா
முட்டா றாஅடி யேத்த முயல்பவர்க்
கிட்டா றாஇட ரோட எடுக்குமே. உ

கைய னைத்துங் கலந்தெழு காவிரி
செய்ய னைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்
கொய்ய னைத்துங் கொணருங் குரக்குக்கா
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. ௩

மிக்க னைத்துத் திசையும் அருவிகள்
புக்குக் காவிரி போந்த புனற்கரைக்

கொக்கி னம்பயில் சோலைக் குரக்குக்கா
நக்க னைநவி லாவினை நாசமே. ௪

விட்டு வெள்ளம் விரிந்தெழு காவிரி
இட்ட நீர்வய லெங்கும் பரந்திடக்
கொட்ட மாமுழ வோங்கு குரக்குக்கா
இட்ட மாயிருப் பார்க்கிட ரில்லையே. ௫

மேலை வானவ ரோடு விரிகடல்
மாலும் நான்முக னும்அளப் பொணாக்
கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. ௬

ஆல நீழ லமர்ந்த அழகனார்
கால னையுதை கொண்ட கருத்தனார்
கோல மஞ்ஞைக ளாலுங் குரக்குக்காப்
பால ருக்கருள் செய்வர் பரிவொடே. ௭

செக்க ரங்கெழு செஞ்சுடர்ச் சோதியார்
அக்க ரையரெம் மாதி புராணனார்
கொக்கி னம்வயல் சேருங் குரக்குக்கா
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. ௮

உருகி யூன்குழைந் தேத்தி யெழுமினீர்
கரிய கண்டனைக் கழலடி தன்னையே
குரவ னஞ்செழுங் கோயில் குரக்குக்கா
இரவு மெல்லியு மேத்தித் தொழுமினே. ௯

இரக்க மின்றி மலையெடுத் தான்முடி
உரத்தை யொல்க அடர்த்தா னுறைவிடம்
குரக்கி னங்குதி கொள்ளுங் குரக்குக்கா
வரத்த னைப்பெற வானுல காள்வரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருக்கானூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

திருவின் நாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னும்பல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே. க

பெண்டிர் மக்கள் பெருந்துணை நன்னிதி
உண்டி னீரென்று கவன்மி னேழைகாள்
கண்டு கொண்மினீர் கானூர் முளையினைப்
புண்ட ரீகப் பொதும்பி லொதுங்கியே. உ

தாயத் தார்தமர் நல்நிதி யென்னுமிம்
மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்
காயத் தேயுளன் கானூர் முளையினை
வாயத் தால்வணங் கீர்வினை மாயவே. ௩

குறியில் நின்றுண்டு கூறையி லாச்சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய லுற்றிரேல் கானூர் முளையவன்
செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. ௪

பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த தென்று வியந்திட லேழைகாள்
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. ௫

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை
எல்லி யும்பக லும்மிசை வானவர்
சொல்லி டாநுந் துயரங்கள் தீரவே. ௬

நீரும் பாரும் நெருப்பும் அருக்கனும்
காரும் மாருதம் கானூர் முளைத்தவன்
சோர்வு மொன்றறி யாது திசைதிசை
ஓர்வு மென்றில ரோடித் திரிவரே. ௭

ஓமத் தோடயன் மாலறி யாவணம்
வீமப் பேரொளி யாய விழுப்பொருள்
காமற் காய்ந்தவன் கானூர் முளைத்தவன்
சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே. ௯

வன்னி கொன்றை யெருக்கணிந் தானமலை
உன்னி யேசென் றெடுத்தவ னொண்திறல்
தன்னை வீழத் தனிவிர லால்வைத்தவன்
கன்னி மாமதிற் கானூர்க் கருத்தனே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருச்சேறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரி யாற்பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்றன் நாம நவிலவே. ௧

என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. ௨

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. ௩

மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்
ஓடி யெய்த்தும் பயனிலை ஊமர்காள்
சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய
ஆட லான்றன் அடியடைந் துய்ம்மினே. ௪

எண்ணி நாளும் எரியயிற் கூற்றுவன்
துண்ணென் றோன்றிற் றுரக்கும் வழிகண்டேன்

திண்ணன சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ண லாருளா அஞ்சுவ தென்னுக்கே. ௫

தப்பி!வானந் தரணிகம் பிக்கிலென
ஒப்பில் வேந்தா ஒருங்குடன சீறிலென
செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய
அப்ப னருளா அஞ்சுவ தென்னுக்கே. ௬

வைத்த மாடும மடந்தைநல் லாரகளும்
ஒத்தொவ் வாதவுற ரார்களு மெனசெயவாா
சித்தர் சேறைத் திருச்செந் நெறியுறை
அத்தா தாமுள ரஞ்சுவ தென்னுக்கே. ௭

குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ
துலங்கி நீநின்று சோர்ந்திடல் நெஞ்சமே
இலங்கு சேறையிற் செந்நெறி மேவிய
அலங்க னருள ரஞ்சுவ தென்னுக்கே. ௮

பழகி னல்வரும பண்டுள சுற்றமும்
விழவி டாவிடில் வேண்டிய எய்தொணா
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய
அழக னருள ரஞ்சுவ தென்னுக்கே. ௯

பொருந்து நீண்மலை யைப்பிடித் தேந்தினன்
வருந்த வூன்றி மலரடி வாங்கினன்
திருந்து சேறையிற் செந்நெறி மேவியங்
கிருந்த சோதியென பார்க்கிட ரில்லையே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## திருக்கோடிகா - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சங்கு லாமுன்கைத் தையலோர் பாகத்தன்
வெங்கு லாமத வேழம வெகுண்டவன்
கொங்கு லாமபொழிற் கோடிகா வாவென
எங்கி லாததோ ரின்பம்வந் தெய்துமே. ௧

வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்
ஓடி வாழ்வினை யுள்கிநீ நாடொறும்

கோடி காவனைக கூறீரேற் கூறினேன
பாடி காவலிற் பட்டுக கழிதிரே. உ

முல்லை நனமுறு வல்லுமை பஙகனா
தில்லை யமபலத தில்லுறை செல்வனா
கொல்லை யேறறினா கோடிகா வாவென்றங
கொல்லை யேத்துவாரக கூனமொன றில்லையே. ௩

நாவ ளமபெறு மாறுமந நனனுதல்
ஆம ளவுஞசொல்லி யனபுசெ யினஅலால்
கோம ளஞசடைக கோடிகா வாவென
ஏவ ளினநெறி யேசமவ வேழையே. ௪

வீறு தானபெறு வாாசில ராகிலும
நாறு பூஙகொனறை தானமிக நல்கானேல்
கூறு வேனகோடி காவுளா யெனறுமால்
ஏறு வேனநுமமா லேசப படுவேனே. ௫

நாடி நாரணன நானமுகன வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோா
கோடி காவனைக கூறாத நாளெலாம
பாடி காவலிற் படடுக கழியுமே. ௬-௭-௮-௯

வரஙக ளால்வரை யையெடுத தானறனை
அரங்க வூனறி யருளசெய்த அப்பனாா
குரஙகு சேர்பொழிற் கோடிகா வாவென
இரங்கு வேனமனத் தேததஙகள் தீரவே. ௰

திருசசிற்றமபலம்

---

## திருப்புள்ளிருக்குவேளூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வெள்ளெ ருககா வம்பிர வுஞசடைப்
புள்ளி ருக்குவே ளூரரன பொற்கழல்
உள்ளிருக்கு முணாச்சியில் லாதவா
நள்ளி ருப்பா நாகக குழியிலே.

மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க்
கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே
போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்
சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. ௨

அரும றையனை ஆணொடு பெண்ணனைக்
கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்
புரிவெண் ணூலனைப் புள்ளிருக்கு வேளூர்
உருகி நைபவ ருள்ளங் குளிருமே. ௩

தன்னு ருவை யொருவர்க் கறிவொணா
மின்னு ருவனை மேனிவெண் ணீற்றனைப்
பொன்னு ருவனைப் புள்ளிருக்கு வேளூர்
என்ன வல்லார்க் கில்லை யிடர்களே. ௪

செங்கண் மால்பிர மற்கும் அறிவொணா
அங்கி யின்னுரு வாகி யழலவதோர்
பொங்க ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
மங்கை பாகனை வாழ்த்த வருமின்பே. ௫

குற்ற மில்லியைக் கோலச் சிலையினால்
செற்ற வார்புரஞ் செந்தழ லாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
பற்ற வல்லவர் பாவம் பறையுமே. ௬

கையி னோடுகால் கட்டி யுமரெலாம்
ஐயன் வீடினன் என்பதன் முன்னம்நீர்
பொய்யி லாஅரன் புள்ளிருக்கு வேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே. ௭

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. ௮-௯

அரக்க னாதலை பத்து மழிதர
நெருக்கி மாமலர்ப் பாதம் நிறுவிய
பொருப்ப னாருறை புள்ளிருக்கு வேளூர்
விருப்பி னாற்றொழு வார்வினை வீடுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

## திருஅன்பிலாலந்துறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வானஞ் சோமதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோனஞ் செல்வனைக் கூறிடக் கிற்றியே. க

காரணத்தர் கருத்தர் கபாலியார்
வாரணத்துரி போர்த்த மணாளனார்
ஆரணப்பொரு ளன்பிலா லந்துறை
நாரணற்கரி யானொரு நம்பியே. உ

அன்பின் ஆனஞ்ச மைந்துட னாடிய
என்பின் ஆனை யுரித்துக் களைந்தவன்
அன்பி லானையம் மானையள் ளூறிய
அன்பி னால்நினைந் தாரறிந் தார்களே. ங

சங்கை யுள்ளது சாவது மெய்யுடை
பங்க னாடி பாவியே னானுய்ய
அங்க ணனெந்தை யன்பிலா லந்துறைச்
செங்க னாடிச் சேரவும் வல்லனே ச

கொக்கிறகர் குளிர்மதிச் சென்னியர்
மிக்க ரக்கர் புரமெரி செய்தவர்
அக்க ரையின ரன்பிலா லந்துறை
நக்கு ருவரும் நம்மை யறிவரே. ரு

வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்
கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்
அள்ள லார்வய லன்பிலா லந்துறை
உள்ள வாறறி யார்சில ரூமரே. சு

பிறவி மாயப் பிணக்கி லழுந்தினும்
உறவெ லாஞ்சிந்தித் துன்னி உகவாதே
அறவ னெம்பிரா னன்பிலா லந்துறை
மறவா தேதொழு தேத்தி வணங்குமே. எ

நுணங்கு நூலயன் மாலு மிருவரும்
பிணங்கி யெங்குந் திரிந்தெய்த்துங் காண்கிலா
அணங்க னெம்பிரா னன்பிலா லந்துறை
வணங்கும் நம்வினை மாய்ந்தறும் வண்ணமே. அ

பொய்யெ லாமுரைக் குஞ்சமண் சாக்கியக்
கையன் மாருரை கேளா தெழுமினோ
ஐய னெம்பிரா னன்பிலா லந்துறை
மெய்யன் சேவடி யேத்துவா மெய்யரே. கூ

இலங்கை வேந்த னிருபது தோளிற்ற
மலங்க மாமலை மேல்விரல் வைத்தவன்
அலங்க லெம்பிரா னன்பிலா லந்துறை
வலங்கொள் வாரைவா னோர்வலங் கொள்வரே. க0

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பாண்டிக்கொடுமுடி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. க

பிரமன் மாலறி யாத பெருமையன்
தரும மாகிய தத்துவ னெம்பிரான்
பரம னுறைபதி பாண்டிக் கொடுமுடி
கரும மாகத் தொழுமட நெஞ்சமே. உ

ஊச லாளல்லள் ஒண்கழ லாளல்லள்
தேச மாந்திருப் பாண்டிக் கொடுமுடி
ஈச னேயெனு மித்தனை யல்லது
பேசு மாறறி யாளொரு பேதையே. ங

தூண்டி யச்சுடர் போலொக்குஞ் சோதியான்
காண்ட லுமெளி யனடி யார்கட்குப்

பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்
காண்டு மென்பவர்க் காகக் கெடுங் கருத்தொன்றே. ௯

நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்
இருக்கொ டும்பணிந் தேத்த விருந்தவன்
திருக்கொ டும்முடி யென்றலுந் தீவினைக்
கருக்கெ டும்மிது கைகண்ட யோகமே. ௫-௩-௭-௮-௯-௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருவான்மியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன் றன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே. ௧

பொருளுஞ் சுற்றமும் பொய்ம்மை விட்டுநீர்
மருளும் மாந்தரை மாற்றி மயக்கறுத்
தருளு மாவல்ல ஆதியா யென்றலும்
மருள றுத்திடும் வான்மியூ ரீசனே. ௨

மந்த மாகிய சிந்தை மயக்கறுத்
தந்த மில்குணத் தானை யடைந்துநின்
றெந்தை யீசனென் றேத்திட வல்லிரேல்
வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. ௩

உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ள முள்ளவ ருக்கருள் வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே. ௪

படங்கொள் பாம்பரைப் பான்மதி சூடியை
வடங்கொள் மென்முலை மாதொரு கூறனைத்
தொடர்ந்து நின்று தொழுதெழு வார்வினை
மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. ௫

நெஞ்சி லைவா நினைகக நினைக்குரூர்
பஞ்சின் மெல்லடி யாளுமை பங்கவென
றஞ்சி நாண்மலர் தூவி யழுதிரேல்
வஞ்சந் தீர்த்திடும் வானமியூ ரீசனே. ௬

நுணங்கு நூலயன் மாலு மறிகிலாக்
குணங்கள் தானபர விகுறைந் துககவர்
சுணங்கு பூண்முலைத் தூமொழி யாரவர்
உணங்க நின்றிடும் வானமியூ ரீசனே. ௭

ஆதி யும்மர ஞயன மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாய பரமனை
ஞோதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்
வாதை தீர்த்திடும் வானமியூ ரீசனே. ௮

ஓட்டை மாடத்தி லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வெஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வானமியூ ரீசனே. ௯

பார மாக மலையெடுத் தானறனைச்
சீர மாகத் திருவிர லூன்றினை
ஆர்வ மாக அழைத்தவ னேத்தலும்
வார மாயினன் வானமியூ ரீசனே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருநாகைக்காரோணம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாணத் தால்மதின் மூன்று மெரித்தவன்
பூணத் தானர வாமை பொறுத்தவன்
காணத் தானினி யான்கடல் நாகைக்கா
ரோணத் தானென நம்வினை யோயுமே. ௧

வண்ட லம்பிய வார்சடை யீசனை
விண்த லம்பணிந் தேத்தும் விகிர்தனைக்

கண்ட லங்கமழ் நாகைக்கா ரோணனைக
கண்ட லும்வினை யான கழலுமே. உ

புனையும் மாமலர் கொண்டு புரிசடை
நனையும் மாமலர் சூடிய நம்பனைக
கனையும் வார்கடல் நாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே. ௩

கொல்லை மால்விடை யேறிய கோவினை
எல்லி மாநட மாடு மிறைவனைக்
கல்லி னார்மதில் நாகைக்கா ரோணனைச்
சொல்ல வேவினை யானவை சோருமே. ௪

மெய்ய னைவிடை யூர்தியை வெண்மழுக்
கைய னைக்கடல் நாகைக்கா ரோணனை
மைய னுக்கிய கண்டனை வானவர்
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. ௫

அலங்கல் சேர்சடை யாதிபு ராணனை
விலங்கல் மெல்லியல் பாகம் விருப்பனைக்
கலங்கள் சேர்கடல் நாகைக்கா ரோணனை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. ௬

சினங்கொள் மால்கரி சீறிய ஏறினை
இனங்கொள் வானவ ரேத்திய வீசனைக்
கனங்கொள் மாமதில் நாகைக்கா ரோணனை
மனங்கொள் வார்வினை யாயின மாயுமே. ௭

அந்த மில்புக ழாயிழை யார்பணிந்
தெந்தை யீசனென் றேத்து மிறைவனைக்
கந்த வார்பொழில் நாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக் கெடுந்துயர் திண்ணமே. ௮

கருவ னைக்கடல் நாகைக்கா ரோணனை
இருவ ருக்கறி வொண்ணா இறைவனை
ஒருவ னையுண ரார்புர மூன்றெய்த
செருவ னைத்தொழத் தீவினை தீருமே. ௯

கடல்க ழிதழி நாகைக்கா ரோணன்றன்
வடவ ரையெடுத் தார்த்த அரக்கனை
அடர வூன்றிய பாத மனைதரத்
தொடர அஞ்சுந் துயக்கறுங் காலனே. க0

திருச்சிற்றம்பலம்

## திருக்காட்டுப்பள்ளி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோட லுறுமுனம்
காட்டுப் பள்ளியு ளானகழல் சேர்மினே. க

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடு நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளானகழல் சேர்மினே. உ

தேனை யென்றுசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே. ௩

அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடும்
கருத்தன் கண்ணுத லண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே. ௪

சுற்ற முந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதணை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்ற மேறும் பிரானடி சேர்மினே. ௫

அடும்புங் கொன்றையும் வன்னியும் மத்தமும்
துடும்பல் செய்சடைத் தூமணிச் சோதியான்

கடம்பன் தாதை கருதுங்காட் டுப்பள்ளி
உடம்பி னாகஙோா உறுதுணை யாகுமே. ௬

மெய்யின மாசுடை யாருடல் மூடுவார்
பொய்யை மெய்யென்று பகருடன வீழன்மின்
கையின மானுடை யானகாட்டுப் பள்ளியெம்
ஐயன் தன்னடி யேயடைந் துய்ம்மினே. ௭

வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்
காலை யேதொழுங் காட்டுப்பள் ளியயுறை
நீல கண்டனை நித்தல் நினைமினே ௮

இன்று ளாாநாளை யில்லை யெனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரு மூமாகாள
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னார்காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே. ௯

எண்ணி லாஅரக் கனமலை யேந்திட
எண்ணி நீண்முடி பத்து மிறுத்தவன்
கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை
நண்ணு வாரவர் தம்வினை நாசமே. ௧0

திருச்சிற்றம்பலம

---

## திருச்சிராப்பள்ளி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. ௧

அரிய யன்தலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்தொழு தேத்து மரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்தொழ அங்கிருப் பார்களே. ௨

அரிச்சி ராப்பகை லைவரா லாட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கும் நடக்குமே. ௩

தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே ௪-௫-௬-௭-௮-௯-௰

திருச்சிற்றம்பலம்

---

## திருவாட்போக்கி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

காலபாசம் பிடித்தெழு தூதுவர்
பால காவிருத் தர்பழை யாரெனார்
ஆல நீழ லமர்ந்தவாட் போக்கியார்
சீல மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே. ௧

விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனில்லை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே. ௨

வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. ௩

கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கியால்
ஏற்று மின்விளக் கையிருள் நீங்கவே. ௪

மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே

ஆறு செஞ்சடை வைத்தவாட் போகியார்க்
கூறி யூறி யுருகுமென னுள்ளமே. ௫

கான மோடிக கடிதெழு தூதுவா
தான மோடு தலைபிடி யாமுனம்
ஆனஞ் சாடி புகத்தவாட் போகியாா
ஊன மில்லவாக குண்மையில நிற்பரே. ௬

பார்ததுப் பாசம பிடித்தெழு தூதுவர்
கூர்தத வேலாற குமைப்பதன முனனமே
ஆாத்த கஙகை யடககுமவாட் போகியாா
சீர்த்தி மைகள் கிளர்நதுரை மினகளே. ௭

நாடி வந்து நமனதமா நலவிருள்
கூடி வந்து குமைப்பதன முனனமே
ஆடல் பாட லுகந்தவாட் போகியை
வாடி யேததநம வாட்டந தவிருமே. ௮

கட்ட றுததுக கடிதெழு தூதுவா
பொட்ட னாககிப் புறபபடா முனனமே
அட்ட மாமலா சூடுமவாட் போக்கியார்க்
கிட்ட மாகி இணையடி யேத்துமே. ௯

இரகக முனனறி யாதெழு தூதுவா
பாரகக ழிததவா பற்றுதண முனனமே
அரக்க னுககருள் செய்தவாட் போகியார்
கரப்ப துங்கரப் பாரவா தங்கட்கே. ௧௰

திருச்சிற்றம்பலம்

---

## திருமணஞ்சேரி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பட்ட நெற்றியர் பாயபுலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறும்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே. ௧

துன்னு வார்குழ லாளுமை யாளொடும்
பின்னு வார்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்மணஞ் சேரி மருந்தினை
உன்னு வார்வினை யாயின வோயுமே. ௨

பற்றி லாடர வாட்டும் புனிதனார்
தெற்றி னார்புரந் தீயெழச் செற்றவர்
சுற்றி னார்மதில் சூழ்மணஞ் சேரியார்
பற்றி னாரவர் பற்றவர் காண்மினே. ௩

மத்த மும்மதி யும்வளர் செஞ்சடை
முத்தர் முக்கணர் மூசர வம்மணி
சித்தர் தீவணர் சீர்மணஞ் சேரியெம்
வித்தர் தாம்விருப் பாரை விருப்பரே. ௪

துள்ளு மான்மறி தாமழு வாளினர்
வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே. ௫

நீர்ப ரந்த நிமிர்புன் சடையின்மேல்
ஊர்ப ரந்த உரகம் அணிபவர்
சீர்ப ரந்த திருமணஞ் சேரியார்
ஏர்ப ரந்தங் கிலங்குசூ லத்தரே. ௬

சுண்ணத் தர்சுடு நீறுகந் தாடலர்
விண்ணத் தம்மதி சூடிய வேதியர்
மண்ணத் தம்முழ வார்மணஞ் சேரியார்
வண்ணத் தம்முலை யாளுமை வண்ணரே. ௭

துன்ன வாடையர் தாமழு வாளினர்
பின்னு செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்பொழில் சூழ்மணஞ் சேரியெம்
மன்ன னார்கழ லேதொழ வாய்க்குமே. ௮

சித்தர் தேவர்கள் மாலொடு நான்முகன்
புத்தர் சேரமண் கையர் புகழவே

மத்தா தாமறி யாமணஞ் சேரியெம்
அத்த ஞடி யார்க்கல்ல லில்லையே. ௯

கடுத்த மேனி யரக்கன் கயிலையை
எடுத்த வனெடு நீண்முடி பத்திறப்
படுத்த லும்மணஞ் சேரி யருளெனக்
கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருமருகல் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. ௧

பாடங் கொள்பனு வல்திறங் கற்றுப்போய்
நாடங் குள்ளன தட்டிய நாணிலீ
மாடஞ் சூழ்மரு கற்பெரு மான்திரு
வேடங் கைதொழ வீடெளி தாகுமே. ௨

சினத்தி ஞலவருஞ் செய்தொழி லாமவை
அனைத்தும் நீங்கிநின் றூதர வாய்மிக
மனத்தி ஞல்மரு கற்பெரு மான்திற
நினைப்பி ஞக்கில்லை நீள்நில வாழ்க்கையே. ௩

ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே. ௪

இன்ன வாறென்ப துண்டறி யேனின்று
துன்னு கைவளை சோரக்கண் ணீர்மல்கும்
மன்னு தென்மரு கற்பெரு மான்திறம்
உன்னி யொண்கொடி யுள்ள முருகுமே. ௫

சங்கு சோர கலையுஞ் சரியவே
மங்கை தானம ருகற்பெரு மானவரும்
அங்க வீதி யருகணை யாநிற்கும
நங்கை மீரிதற் கென்செய்கேன நாளுமே. ௬

காட்சி பெற்றில னாகிலுங் காதலே
மீட்சி யொன்றறி யாது மிகுவதே
மாட்சி யாமரு கற்பெரு மானுக்குத
தாழ்ச்சி சாலவுண் டாகுமென னையலே. ௭

நீடு நெஞ்சுள் நினைந்துகண் ணீமலரும்
ஓடு மாலினோ டொணகொடி மாதராள
மாடம் நீளம ருகற்பெரு மானவரில
கூடு நீயென்று கூட விழைகுமே. ௮

கந்த வார்குழல கட்டிலள காரிகை
அந்தி மால்விடை யோடுமென பாய்மிக
வந்தி டாய்மரு கற்பெரு மானென்று
சிந்தை செய்து திகைத்திடுங் காண்மினே. ௯

ஆதி மாமலை யனறெடுத் தானிற்றுச்
சோதி யென்றலுந் தொல்லருள செய்திடும்
ஆதி யானம ருகற்பெரு மானதிறம்
ஓதி வாழ்பவா உமபாகரு மும்பரே. ௰

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒன்று வெண்பிறைக கண்ணியோா கோவணம்
ஒன்று கீளுமை யோடும் உடுத்தது
ஒன்று வெண்தலை யேந்தியெம் உள்ளத்தே
ஒன்றி நின்றங் குறையு மொருவனே. ௧

இரண்டு மாமவாக் குள்ளன செய்தொழில்
இரண்டு மாமவர்க் குள்ளன கோலங்கள்

இரண்டு மில்லிள மானெனமை யாளுகந்
திரண்டு போதுமென் சிந்தையுள் வைகுமே. ௨

மூன்று மூர்த்தியு ணின்றிய லுந்தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தன
மூன்று கண்ணினன் தீத்தொழின் மூன்றினன்
மூன்று போதுமென் சிந்தையுள் மூழ்குமே. ௩

நாலின் மேன்முகஞ் செற்றது மன்னிழல்
நாலு நன்குணாந் திட்டது மின்பமாம்
நாலு வேதஞ் சரித்தது நன்னெறி
நாலு போலெம் அகத்துறை நாதனே. ௪

அஞ்சு மஞ்சுமோ ராடி யரைமிசை
அஞ்சு போலரை யாத்ததின் தத்துவம்
அஞ்சு மஞ்சுமோ ரோரஞ்சு மாயவன்
அஞ்சு மாமெம் அகத்துறை யாதியே. ௫

ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்
ஆறு சூடிய அண்ட முதல்வனார்
ஆறு கூறமையர்க கச்சம யப்பொருள்
ஆறு போலெம் அகத்துறை யாதியே. ௬

ஏழு மாமலை யேழ்பொழில் சூழ்கடல்
ஏழு போற்றுமி ராவணன் கைந்நரம்
பேழு கேட்டருள் செய்தவன் பொற்கழல்
ஏழுஞ் சூழடி யேன்மனத் துள்ளவே. ௭

எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
எட்டு வான்குணத் தீசனெம் மானறனே
எட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே
எட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே. ௮

ஒன்ப தொன்பதி யானை யொளிகளி
றொன்ப தொன்பது பல்கணஞ் சூழவே
ஒன்ப தாமவை தீத்தொழி லின்னுரை
ஒன்ப தொத்துநின் றென்னு ளொடுங்குமே. ௯

பத்து நூறவன வெங்கண்வெள் ளேறண்ணல்
பத்து நூறவன பல்சடை தோளமிசை
பத்தி யாமில மாதலின ஞானத்தால்
பத்தி யானிடங் கொண்டது பள்ளியே. ௧0

திருச்சிற்றமபலம்

---

## தனித் திருக்குறுந்தொகை

திருச்சிற்றமபலம்

மாசில வீணையும மாலை மதியமும
வீசு தென்றலும வீங்கிள வேனிலும
மூசு வண்டறை பொய்கையும போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே. ௧

நமச்சி வாயவே ஞானமுங கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. ௨

ஆளா காரா ளானாரை யடைந் துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலா
தோளா தசுரை யோதொழும பாசெவி
வாளா மாயந்துமண் ணாகிக கழிவரே. ௩

நடலை வாழ்வுகொண் டென்செயதிர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. ௪

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக கழிவரே. ௫

குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்

அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே. ௬

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே. ௭

எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேயுழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. ௮

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே. ௯

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஏயி லானையெ னிச்சை யகம்படிக்
கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மணி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் னாவியே. ௧

முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. ௨

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாலுனை நானுந் தொழுவனே. ௩

புழுவுக் குங்குணம் நான்கெனக் குமதே
புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
புழுவி னுங்கடை யேன்புனி தன்தமர்
குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே. ௪

மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. ௫

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னால்முனி வுண்பதே. ௬

மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே. ௭

என்னை யேது மறிந்தில னெம்பிரான்
தன்னை நானுமுன் ஏது மறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தனே. ௮

தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே. ௯-௰

திருச்சிற்றம்பலம்

---

## காலபாசத் திருக்குறுந்தொகை

### திருச்சிற்றம்பலம்

கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. க

நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பனைக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க வெனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே. உ

கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென்று நின்றவர்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே. ங

சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களி பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பாருழைப் போகலே. ச

இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே. ரு

வாம தேவன் வளநகர் வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமம் தூபமும் தண்ணறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. சா

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம தீச னடியரை
விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. எ

விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்சல் நீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி யருகணை யாதுநீ
பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே. ௮

இன்னங் கேண்மி னிளமதி சூடிய
மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. ௯

மற்றுங் கேண்மின் மனப்பரி பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவண
ஒற்றை யேறுடை யானடி யேயலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகலே. ௧௦

அரக்க னீரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டானதமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் போமின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரானகழல் சூடுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## மறக்கிற்பனேயென்னும் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

காச னைக்கன லைக்கதிர் மாமணித்
தேச னைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்
மாச னைக்கழித் தாட்கொள வல்லவெம்
ஈச னையினி நான்மறக் கிற்பனே ௧

புந்திக் கும்விளக் காய புராணனைச்
சந்திக் கணநட மாடுஞ் சதுரனை
அந்தி வண்ணனை ஆரழல் மூர்த்தியை
வந்தெ னுள்ளங்கொண் டானை மறப்பனே. ௨

ஈச னீசனென் றென்று மரற்றுவன்
ஈசன் தானென் மனத்திற் பிரிவிலன்

ஈசன தன்னையு மென்மனத் துட்கொண்டு
ஈசன தன்னையும யானமறக கிற்பனே. ௩

ஈச னென்னை யறிந்த தறிந்தனன
ஈசன சேவடி யேற்பப பெற்றதால
ஈசன சேவடி யேத்தப்பெற் றேனினி
ஈசன தன்னையும யானமறக கிற்பனே. ௪

தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை
வேனி லானை மெலிவுசெய தீயழல்
ஞான மூர்த்தியை நானமறக கிற்பனே. ௫

கன்ன லைக்கரும் பூறிய தேறலை
மின்ன னைமின்ன னைய உருவனைப்
பொன்ன னைமணிக் குன்று பிறங்கிய
என்ன னையினி யானமறக் கிற்பனே. ௬

கரும்பி னைக்கட்டி யைக்கந்த மாமலர்ச
சுரும்பி னைச்சுடர்ச் சோதியுட் சோதியை
அரும்பி னிற்பெரும் போதுகொண் டாய்மலர்
விரும்பு மீசனை யானமறக கிற்பனே. ௭

துஞ்சும போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக கிற்பனே. ௮

புதிய பூவினைப் புண்ணிய நாதனை
நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்
கதியைக் கண்டங் கறுத்த கடவுளை
மதியை மைந்தனை நானமறக கிற்பனே. ௯

கருகு கார்முகில் போல்வதோர் கண்டனை
உருவ நோக்கியை யூழி முதல்வனைப்
பருகு பாலனைப் பால்மதி சூடியை
மருவு மைந்தனை நானமறக கிற்பனே. ௧௦

திருச்சிற்றம்பலம்

# தொழற்பாலதே என்னுந் திருக்குறுந்தொகை

## திருச்சிற்றம்பலம்

அண்டத் தானை யமரர் தொழப்படும்
பண்டத் தானைப் பவித்திர மாதிரு
முண்டத் தானைமுற் றாத இளம்பிறைத்
துண்டத் தானைக்கண் டார்தொழற் பாலதே. க

முத்தொப் பானை முளைத்தெழு கற்பக
வித்தொப் பானை விளக்கிடை நேரொளி
ஒத்தொப் பானை யொளிபவ ளத்திரள்
தொத்தொப் பானைக்கண் டார்தொழற் பாலதே. உ

பண்ணொத் தானைப் பவளத் திரண்டதோர்
வண்ணத் தானை வகையுணர் வானறனை
எண்ணத் தானை யிளம்பிறை போல்வெள்ளைச்
சுண்ணத் தானைக்கண் டார்தொழற் பாலதே. ௩

விடலை யானை விரைகமழ் தேன்கொன்றைப்
படலை யானைப் பலிதிரி வானசெலும்
நடலை யானை நரிபிரி யாததோர்
சுடலை யானைக்கண் டார்தொழற் பாலதே. ௪

பரிதி யானைப்பல வேறு சமயங்கள்
கருதி யானைக்கண் டாமனம் மேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக்கண் டார்தொழற் பாலதே. ௫

ஆதி யானை அமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை உணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டார்தொழற் பாலதே. ௬

ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்
கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத் தானை முதல்வனை மூவிலைச்
சூலத் தானைக்கண் டார்தொழற் பாலதே. ௭

ஆதிப் பாலட்ட மூர்த்தியை ஆனஞ்சும்
வேதிப் பானைநம் மேலவினை வெந்தறச்
சாதிப பானைத தவத்திடை மாறறங்கள்
சோதிப் பானைககண டாதொழற் பாலதே. ௮

நீறறி ஞனை நிகரில்வெண் கோவணக
கீறறி ஞனைக கிளரொளிச செஞசடை
ஆறறி ஞனை யமராத மாருயிர
தோறறி ஞனைககண டாதொழற பாலதே. ௯

விட்டிட் டானைமெயஞ் ஞானதது மெயப்பொருள்
கட்டிட் டானைக கனங்குழை பாலனபு
பட்டிட் டானைப் பகைத்தவா முப்புரஞ்
சுட்டிட் டானைக்கண டாதொழற பாலதே. ௧0

மூற்றி ஞனை இராவணனை நீண்முடி
ஒற்றி ஞனை யொருவிர லானூறப்
பற்றி ஞனையோா வெண்டலைப் பாம்பரைச்
சுற்றி ஞனைககண் டாதொழத் பாலதே. ௧௧

திருசசிற்றம்பலம்

## இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்
நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்
சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை
மிக்குக் காணலுற் ருாங் கிருவரே. ௧

அலரு நீருங்கொண் டாட்டித் தெளிந்திலர்
திலக மண்டலந் தீட்டித் திரிந்திலர்
உலக மூர்த்தி யொளிநிற வண்ணனைச்
செலவு காணலுற் ருாங் கிருவரே. ௨

ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்

காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை
ஒப்பிக் காணலுற் றாரங் கிருவரே. ௩

நெய்யும் பாலுங்கொண் டாட்டி நினைந்திலா
பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலர்
ஐயன் வெய்ய அழல்நிற வண்ணனை
மெய்யைக் காணலுற் றாரங் கிருவரே. ௪

எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலா
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலா
தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. ௫

மரங்க ளேறி மலர்பறித் திட்டிலா
நிரம்ப நீர்சுமந் தாட்டி நினைந்திலா
உரம்பொ ருந்தி யொளிநிற வண்ணனை
நிரம்பக் காணலுற் றாரங் கிருவரே. ௬

கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலா
அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்ட கட்டமுற் றாரங் கிருவரே. ௭

வெந்த நீறு விளங்க அணிந்திலர்
கந்த மாமல ரிண்டை புனைந்திலர்
எந்தை யேறுகந் தேறிய வண்ணனை
அந்தங் காணலுற் றாரங் கிருவரே. ௮

இளவெ ழுந்த இருங்குவ ளைம்மலர்
பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்
களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன்
அளவு காணலுற் றாரங் கிருவரே. ௯

கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வானசங் கம்விம்ம வாய்வைத்திலர்
அண்ட மூர்த்தி யழல்நிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே. ௧0

செஙக ணுனும் பிரமனுந் தம்முளே
எங்குந தேடித திரிநதவர் காணகிலா
இஙகுற் றேனென றி லிஙகத்தே தோ னறினன்
பொஙகு செஞ்சடைப் புணணிய மூாததியே. கக

திருச்சிற்றமபலம்

---

## மனத்தொகைத் திருக்குறுந்தொகை

திருசசிறறமபலம

பொனனுள் ளததிரள புனசடை யினபுறம்
மினனுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை
நினனுள ளத்தருள் கொண்டிருள நீஙகுதல்
எனனுள் ளத்துள தெந்தை பிரானிரே. க

முகக ணும்முடை யாய்முனி கள்பலா
தொகளெ ணுங்கழ லாயொரு தோலினே
டகக ணமமமை யாயரு ளேயலா
தெகக ணும்மில னெந்தை பிரானிரே. உ

பனியாய் வெங்கதி ராயபடா புனசடை
முனியாய் நீயுல கமமுழு தாளினும
தனியாய் நீசரண் நீசல மேபெரி
தினியாய நீயெனக் கெந்தை பிரானிரே. ௩

மறையும் பாடுதி மாதவா மாலினுக்
குறையு மாயினே கோளர வோடொரு
பிறையுஞ் சூடினே யென்பத லாற்பிறி
திறையுஞ சொல்லிலே யெந்தை பிரானிரே. ௪

பூத்தார் கொனறையி னய்புலி யினனதள்
ஆர்த்தா யாடா வோடன லாடிய
கூத்தா நினகுரை யார்கழ லேயல
தேத்தா நாவெனக் கெந்தை பிரானிரே. ௫

பைம்மா லும்மர வாபா மாபசு
மைம்மால் கண்ணியோ டேறுமைந் தாவெனும்

அம்மா லல்லது மற்றடி நாயினேற்
கெம்மா னும்மிலே னெந்தை பிரானிரே. ௬

வெப்பத தினமன மாசு விளக்கிய
செப்பத தாற்சிவ னென்பவா தீவினை
ஒப்பத் தீர்த்திடு மொண்கழ லாறகல்ல
தெப்பற் றும்மில னெந்தை பிரானிரே. ௭

திகழுஞ் சூழ்சுடர் வானொடு வைகலும்
நிகழு மொண்பொரு ளாயின நீதியென
புகழு மாறு மலானுன பொன்னடி
இகழு மாறிலே னெந்தை பிரானிரே. ௮

கைப்பற் றித்திரு மால்பிர மனனுனை
எப்பற் றியறி தற்கரி யாயருள்
அப்பற் றல்லது மற்றடி நாயினேன
எப்பற் றுமமிலே னெந்தை பிரானிரே. ௯

எந்தை யெம்பிரா னென்றவா மேல்மனம்
எந்தை யெம்பிரா னென்றிறைஞ் சித்தொழு
தெந்தை யெமபிரா னென்றடி யேத்துவார
எந்தை யெம்பிரா னென்றடி சேர்வரே. ௧0

திருச்சிற்றம்பலம்

---

## சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்திப் பார்மனத் தானசிவன் செஞ்சுடர்
அந்தி வான்நிறத் தானணி யார்மதி
முந்திச் சூடிய முக்கண்ணி னானடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே. ௧

அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. ௨

ஆதி யாயவ னாரு மிலாதவன்
போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்
பாதி பெண்ணொரு வாகிப் பரஞ்சுடர்ச்
சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே. ௩

இட்ட திட்டதோ ரேறுகந் தேறியூர்
பட்டி தட்டக்கை யாய்ப்பலி தேர்வதோர்
கட்ட வாழ்க்கைய னாகிலும் வானவர்
அட்ட மூர்த்திய ருள்ளன் றடைவரே. ௪

ஏறில கூறைய னாகி யெரிந்தவெண்
நீறு பூசி நிலாமதி சூடிலும்
வீறி லாதன செய்யினும் விண்ணவர்
ஊற லாயரு ளாயென் றுரைப்பரே. ௫

உச்சி வெண்மதி சூடிலும் ஊனறாப்
பச்சை வெண்டலை யேந்திப் பலவி(ல)லம்
பிச்சை யேபுகு மாகிலும் வானவர்
அச்சந் தீர்த்தரு ளாயென் றடைவரே. ௬

ஊரி லாயென் றொருக உரைப்பதோர்
பேரி லாய்பிறை சூடிய பிஞ்ஞகா
காரு லாங்கண்ட னேயென் கழலடி
சேரி லார்கட்குத் தீயவை தீயவே. ௭

எந்தை யேயெம் பிரானே யெனவுள்கிச்
சிந்திப் பாரவா தீவினை தீருமால்
வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
அந்த மாவளப் பாரடைந் தார்களே. ௮

ஏன வெண்மருப் போடென்பு பூண்டெழில்
ஆனை யீருரி போர்த்தன லாடிலும்
தான வண்ணத்த னாகிலுந் தன்னையே
வான நாடர் வணங்குவர் வைகலே. ௯

ஐயன் அந்தணன் ஆணொடு பெண்ணுமாம்
மெய்யன் மேதகு வெண்பொடி பூசிய

மைகொள் கண்டத்தனை மானமறிக் கையினை
பைகொள் பாம்பரை யார்த்த பரமனே. ௧௦

ஒருவ னாகிநின் றானிவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்
அருவ னாஅரை ஆர்த்தவ னாகழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. ௧௧

ஓத வண்ணனும் ஒண்மலர்ச் செல்வனும்
நாத னேயரு ளாயென்று நாடொறும்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. ௧௨

ஔவ தன்மை யவரவ ராக்கையான்
வெவ்வ தன்மைய னென்பதொ ழிமினோ
மௌவல் நீண்மலர் மேலுறை வானொடு
பவ்வ வண்ணனு மாய்ப்பணி வார்களே. ௧௩

அக்கு மாலையும் பூண்டன லேந்திய
புக்கு பலபலி தேரும் புராணனை
நக்கு நீர்கள் நரகம் புகேன்மினோ
தொக்க வானவ ராற்றொழு வானையே. ௧௪

கங்கை தங்கிய செஞ்சடை மேலிளந்
திங்கள் சூடிய தீநிற வண்ணனார்
இங்க னாரெழில் வானம் வணங்கவே
அங்க னாற்கது வாலவன் தன்மையே. ௧௫

நகர வெல்கொடி யானொடு நன்னெஞ்சே
நுகர நீயுனைக் கொண்டுயப் போக்குறில்
மகர வெல்கொடி மைந்தனைக் காய்ந்தவன்
புகரில் சேவடி யேபுக லாகுமே. ௧௬

சரண மாம்படி யார்பிற ரியாவரோ
கரணந் தீர்த்துயிர் கையி லிகழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூஎயில் எய்தவ னல்லனே. ௧௭

ஏமமென்னன் டானைநர கர்க்கு நமக்கெல்லாம்
சிவனென்ன டானசெழு மானமறிக் கையினன்
கவனஞ் செய்டங் கனவிடை யூர்தியான்
தமனென ருழுங் கெடுத்த டாற்றமே. ௧௮

திடப மேறிப் பலபலி யேற்பவர்
அடவி காதலித் தாவெ வைநதவெப
படமம் பாம்பரை யார்த்த பரமனைக்
கடவி ராய்ச்சென்று கைதொழு துய்ம்மினே. ௧௯

இணர்ந்து கொன்றைப்பொன் றாது சொரிந்திடும்
புணர்ந்த வாளர வம்மதி யோடுடன்
அணைந்த அஞ்சடை யானவன் பாதமே
உணர்ந்த உள்ளத் தவருணர் வார்களே. ௨0

தருமந் தானத் தவந்தான் தவத்தால்வரும்
கருமந் தான்கரு மானமறிக் கையினன்
அருமந் தன்ன அதிர்கழல் சேர்மினே
சிரமஞ் சேர்கழல் தீவினை யாளரே. ௨௧

நமச்சி வாயவென் பாருள ரேலவர்
தமச்சம் நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய ராகிலும்
இமைத்து நிற்பது சால அரியதே. ௨௨

பற்பல காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல காலநின் றேத்துமின் தொல்வினை
வெற்பில் தோன்றிய வெங்கதிர் கண்டவப்
புற்ப னிக்கெடு மாறது போலுமே. ௨௩

மணிசெய் கண்டத்து மானமறிக் கையினன்
கணிசெய் வேடத்த ராயவர் காப்பினல்
பணிகள் தாஞ்செய வல்லவர் யாவர்தம்
பிணிசெய் யாக்கையை நீக்குவர் பேயரே. ௨௪

இயக்கர் கின்னர ரிந்திரன் தானவர்
நயக்க நின்றவன் நான்முகன் ஆழியான்

மயக்க மெய்தவன் மாலெரி யாயினான்
வியக்குந் தன்மையி னானெம் விகிர்தனே. ௨௫

அரவ மார்த்தன னாடிய அண்ணலைப்
பரவு வாரவர் பாவம் பறைதற்குக்
குரவை கோத்தவ னுங்குளிர் போதின்மேல்
கரவில் நான்முக னுங்கரி யல்லரே. ௨௬

அழலங் கையினன் அந்தரத் தோங்கினான்
றழலும் மூவெயி லொள்ளழ லூட்டினான்
தழலுந் தாமரை யானொடு தாவினான்
கழலுஞ் சென்னியுங் காண்டற் கரியனே. ௨௭

இளமை கைவிட் டகறலு மூப்பினா
வளமை போயப்பிணி யோடு வருதலால்
உளமெ லாமொளி யாயமதி யாயினான்
கிளமை யேகிளை யாக நினைப்பனே. ௨௮

தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. ௨௯

இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன்
றலங்க லோடுட னேசெல வூன்றிய
நலங்கொள் சேவடி நாடொறு நாடொறும்
வலங்கொண் டேத்துவார் வானுல காள்வரே. ௩௦

திருச்சிற்றம்பலம்

---

## உள்ளத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை
ஆற லைக்கநின் றூடும அமுதினைத்
தேற லைத்தெளி யைத்தெளி வாய்ந்ததோர்
ஊற லைக்கண்டு கொண்டதென் னுள்ளமே. ௧

பொந்தை யைப்புகக் கீகப் புகுந்திடும்
தந்தை யைத்தழல் போல்வதோர் மேனியைச்
சிந்தை யைத்தெளி வைத்தெளி வாய்ந்ததோர்
எந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௨

வெள்ளத் தாவிருஞை யாகள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனை
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றினா
றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே. ௩

அம்மா னையமு தினமு தேயென்று
தம்மா னைத்தத்து வத்தடி யார்தொழும்
செம்மா னிறம போல்வதோர் சிந்தையுள்
எம்மா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௪

கூறே றும்உமை பாகமோர் பாலராய
ஆறே றுஞ்சடை மேற்பிறை சூடுவர்
பாறே றுந்தலை யேந்திப பலவி(ல)லம
ஏறே றுமெந்தை யைக்கண்டதெ னுள்ளமே. ௫

முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றா
தந்நெஞ் சந்தமக் குத்தாம லாதவர்
வன்னெஞ் சம்மது நீக்குதல் வல்லீரே
என்னெஞ் சிலீச னைக்கண்டதெ னுள்ளமே. ௬

வென்று னைப்புல னைந்துமென் தீவினை
கொன்று னைக்குணத் தாலே வணங்கிட
நன்று நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்று னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௭

மருவி னைமட நெஞ்சம் மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. ௮

தேச னைத்திரு மால்பிர மன்செயும்
பூச னைப்புண ரிற்புணர் வாயதோர்

நேச னைநெஞ்சி னுள்நிறை வாய்நின்ற
ஈச னைக்கண்டு கொண்டதென் னுள்ளமே. ௯

வெறுத்தா னைம்புல னும்பிர மன்தலை
அறுத்தா னையாக் கனகயி லாயத்தைக்
கறுத்தா னைக்கா லில்விர லொன்றினால்
ஒறுத்தா னைக்கண்டு கொண்டதென் னுள்ளமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## பாவநாசத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவி லஞ்சுகந் தாடு மவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே. ௧

கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்குமரித் துறை யாடிலென்
ஓங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீச னெனாதவர்க் கில்லையே. ௨

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மித்தொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீச னெனாதவர்க் கில்லையே. ௩

வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே. ௪

காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
ஏல ஈசனென் பார்க்கன்றி யில்லையே. ௫

கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி யிருந்தவஞ் செய்யிலென்
ஊனை யுண்ட லொழிந்துவா னோக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே. ௬

கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பய னில்லையே. ௭

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே. ௮

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே. ௯

மற்று நற்றவஞ் செய்து வருந்திலென்
பொற்றை பற்றெடுத் தானுடல் புக்கிறக்
குற்ற நற்குரை யாகழற் சேவடி
யுற்றி லாதவர்க் குய்ப்பய னில்லையே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## ஆதிபுராணத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயக னாதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே ௧

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனுந்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே. ௨

நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே. ௩

வாது செய்து மயங்கும் மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலும் ஏழைகாள்
யாதொர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வனலால் தேவர்மற் றில்லையே. ௪

கூவல் ஆமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. ௫

பேயவ னாத்தமர் வானைப் பிரார்த்தித்தார்க்
கேவ லேயிமை யோர்முடி தன்னடிச்
சாய்வ னைச்சல வார்கள் தமக்குடல்
சீவ னைச்சிவ னைச்சிந்தி யார்களே. ௬

எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன
துருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை யயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே. ௭

அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழும்
கருத்தி னைநினை யார்கன மனவரே. ௮

தாயி னும்நல்ல சங்கர னுக்கன்பா
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயா பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே. ௯

அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாருள்
பெருக்கச் செய்த பிரான்பெருந் தன்மையை
அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலா
கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. ௰

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

---

## ஆறாந் திருமுறை

---

### கோயில் - பெரிய திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அரியானை அந்தணர்தஞ் சிந்தை யானை அருமறையின் அகத்தானை அணுவை யார்க்குந், தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. க

கற்றானைக் கங்கைவார் சடையான் தன்னைக் காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை, அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய் வானை ஆரூரும் புகுவானை யறிந்தோ மன்றே, மற்றொருவர் தன்னொப்பா ரில்லா தானை வானவர்கள் எப்பொழுதும் வணங்கி யேத்தப், பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. உ

கருமானி னுரியதளே உடையா வீக்கிக் கனைகழல்கள் கலந்தொலிப்ப அனலகையேந்தி, வருமானத் திரள்தோள்கள் மட்டித் தாட வளர்மதியஞ் சடைக்கணிந்து மானோர் நோக்கி, அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண அமரர்கணம் முடிவணங்க ஆடு கின்ற, பெருமானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. ௩

அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் தன்னை அமரர்கள்தம் பெருமானை யரனை மூவா, மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும், திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந் திரிசுடர்க ளோரிரண்டும் பிறவு மாய, பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. ௪

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும், பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும், பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. ௫

கருமட்டமரும் மொழிமடவாள் பங்கன் தன்னைக் கனவயிரக் குன்றனைய காட்சி யானை, அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை யருமறையோ டாறங்க மாயி னானைச், சுரும்பமருங் கடிபொழில்கள் சூழ்தென் னூரன் சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க, பெருமபொருளைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல் லாம் பிறவா நாளே. ௬

உரும்பயனை யெழுநரம்பி னோசை யானை வரைசிலையா வானவர்கண் முயன்ற வாளி, அரும்பயஞ்செய் யவுணர்புர மெரியக் கோத்த அம்மானை யலைகடல்நஞ் சயின்றான் றன்னைச், சுரும்பமருங் குழன்மடவார் கடைக்கண் ணோக்கில் துளங்காத சிந்தையரா யதுறந்தோ ருள்ளப், பெரும்பயனைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல் லாம் பிறவா நாளே. ௭

காரானை யீருரிவைப் போர்வை யானைக் காமருபூங் கச்சியே கம்பன் தன்னை, யாரேனு மடியவர்கட் கணியான் தன்னை யமரர்களுக் கறிவரிய அளவி லானைப், பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம் பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை யெண்ணில், போரானைப் பெரும்பற் றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. ௮

முற்றாத பால்மதியஞ் சூடி னானை மூவுலகுந் தானாய முதல் வன் றன்னைச், செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் றன்னைத்

திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக், குற்றாலத் தமர்ந்துறை
யுங் குழகன் தன்னைக் கூத்தாட வல்லானைக் கோனை ஞானம், பெற்
றானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா
நாளே. ௯

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங் கடிக்கமலத் திருந்தவ
னுங் காணா வண்ணம், சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும், ஏரொளியை இருநில
னும் விசும்பும் விண்ணு மேழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற,
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம்
பிறவா நாளே. ௰

திருச்சிற்றம்பலம்

## கோயில் - புக்க திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மங்குல் மதிதவழும் மாட வீதி மயிலாப்பி லுள்ளார் மருக லுள்
ளார், கொங்கிற் கொடுமுடியார் குற்றா லத்தார் குடமூக்கி லுள்ளார்
போய்க் கொள்ளம் பூதூர், தங்குமிட மறியார் சால நாளார் தருமபுரத்
துள்ளார் தக்க ளூரார், பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப் புலி
யூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே ௧

நாகம் மரைக் கசைத்த நம்ப ரிந்நாள் நனிபள்ளி யுள்ளார்போய் நல்
லூர்த் தங்கிப், பாகப் பொழுதெல்லாம் பாசூர்த் தங்கிப் பரிதிநிய மத்
தார் பன்னிரு நாள், வேதமும் வேள்விப் புகையு மோவா விரிநீர்
மிழலை யெழுநாள் தங்கிப், போகமும் பொய்யாப் பொருளு மானார்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. ௨

திறங்காட்டி யெல்லாம் விரித்தார் போலுந் தூமதியும் பாம்பு
முடையார் போலும், மறங்காட்டி மும்மதிலு மெய்தார் போலும் மந்
திரமுந் தந்திரமுந் தாமே போலும், அறங்காட்டி யந்தணர்க்கன் றால
நீழல் அறமருளிச் செய்த அரனா ரிந்நாள், புறங்காட் டெரியாடிப்
பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. ௩

வாரேறு வனமுலையாள் பாக மாக மழுவாள்கை யேந்தி மயானத்
தாடிச், சீரேறு தண்வயல்சூ ழோத வேலித் திருவாஞ்சி யத்தார் திரு

நள் ளாறுரா, காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த கண்விளங்கு நெற்றி யார் கடல்நஞ் சுண்டார், போரேறு தாமேறிப் பூதஞ் சூழப் புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே. ௪

காரார்கமழ்கொன்றைக்கண்ணிசூடிக் கபாலங்கை யேந்திக்கணங்கள்பாட ஊரார் இடும்பிச்சை கொண்டுழலு முத்தமராய் நின்ற ஒருவ னார்தாம் சீரார்கழல்வணங்குந்தேவதேவர் திருவாரூர்த்திருமூலட்டானம்மேயார் போரார்விடையேறிப்பூதஞ்சூழப் புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே.

காதார் குழையினர் கட்டங் கத்தர் கயிலாய மாமலையார் காரோ ணத்தார் மூதாயர் மூதாதை யில்லார் போலு முதலு மிறுதியுந் தாமே போலும் மாதாய மாதர் மகிழ அன்று வன்மதவேள் தன்னுடலங் காய்ந்தார் இந்நாள் போதார் சடைதாழப் பூதஞ்சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே.

இறந்தார்க்கு மென்று மிறவா தார்க்கும் இமையவர்க்கும் ஏகமாய் நின்று சென்று, பிறந்தார்க்கு மென்றும் பிறவா தார்க்கும் பெரியான் றன் பெருமையே பேச நின்று, மறந்தார் மனத்தென்றும் மருவார் போலும் மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர், புறந்தார் சடைதா ழப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. எ

குலாவெண் டலைமாலை யென்பு பூண்டு குளிர்கொன்றைத் தார ணிந்து கொல்லே றேறிக், கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக் கையோ டனலேந்திக் காடு றைவார், நிலாவெண் மதியுரிஞ்ச நீண்ட மாடம் நிறைவயல்சூழ் நெய்த்தானம் மேய செல்வர், புலால்வெண் டலை யேந்திப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. அ

சந்தித்த கோவணத்தர் வெண்ணூல் மார்பர் சங்கரனைக் கண் டீரோ கண்டோ மின்னாள், பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப் படுதலையி லென்கொலோ ஏந்திக் கொண்டு, வந்திங்கென் வெள்வளை யுந் தாமு மெல்லா மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப், பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. ௯

பாதங்கள் நல்லார் பரவி யேத்தப் பத்திமையால் பணிசெய்யுந் தொண்டர் தங்கள், ஏதங்கள் தீர இருந்தார் போலும் எழுபிறப்பும் ஆளுடைய ஈசனார் தாம், வேதங்க ளோதியோர் வீணை யேந்தி விடை

யொனறு தாமேறி வேத கீதர், பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப் புலியூர்சிற் றம்பலமே புக்கார் தாமே. ௧௦

பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் றார்த்துப் பகவனார் பாரிடங்கள் சூழ நட்டந், சிட்டராய்த் தீயேந்திச் செல்வார் தம்மைத் தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மின்னாள், விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே ஓதுவதும் வேதமே வீணை யுண்டே, கட்டங் கங் கையதே சென்று காணீர் கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே.

திருச்சிற்றம்பலம்

---

## திருஅதிகைவீரட்டானம் - ஏழைத்திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வெறிவிரவு கூவிளநல் தொங்க லானை வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப், பொறியரவி னானைப்பள் ளூதி யானைப் பொன்னனி றத்தி னானைப் புகழ்தக் கானை, அறிதற் கரியசீ ரம்மான் றன்னை அதியரைய மங்கை யமர்ந்தான றன்னை, எறிகெடிலத் தானை யிறை வன றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௧

வெள்ளிக் குன்றன்ன விடையான றன்னை விலவலான வில்வட் டங் காய்ந்தான் றன்னை, புள்ளிவரி நாகம் பூண்டான றன்னைப் பொன் பிதிர்ந்தன்ன சடையான றன்னை, வள்ளி வளைத்தோள முதல்வன் றன்னை வாரா வுலகருள வல்லான் றன்னை, எள்கவிடு பிச்சை யேற் பான றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௨

மூந்தி யுலகம் படைத்தான றன்னை மூவா முதலாய மூர்த்தி தன்னைச், சந்த வெண்திங்க ளணிந்தான றன்னைத் தவநெறிகள் சாதிக்க வல்லான் றன்னைச், சிந்தையில் தீவினையைத் தேனைப் பாலைச் செழுங்கெடில வீரட்டம் மேவி னானை, எந்தை பெருமானை யீசன தன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௩

மந்திரமும் மறைப்பொருளு மானான் றன்னை மதியமும் ஞாயிறுங் காற்றுந் தீயும், அந்தரமு மலைகடலு மானான் றன்னை யதியரைய மங்கை யமர்ந்தான றன்னைக, கந்தருவஞ் செய்திருவர் கழல்கை கூப் பிக் கடிமலர்கள் பலதூவிக் காலை மாலை, இந்திரனும் வானவருந் தொழச்செல் வானை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௪

ஒருபிறப்பி லொருவனடியை யுணராதுங் காணாது முய்யாகதிக்கு வழி
தேடிப் போக மாட்டா, திருபிறப்பொன் றுணராது மாசு பூசி வழி
காணா தவமேபோல்வார் மனத்த ராகி, அருபிறப்பை யறுப்பிக்கு
மதிகை பூர னெம்மானைத் தன் அடியிணையே யணைந்து வாழா, திருபிறப்
பங் கெறவிடா திருந்தார் சொற்கேட் டேழையே னான்பண் டிகழ்ந்த
வாறே. ௫

ஆறேறு வல்ல சடையான் றன்னை யஞ்சனம் போலு மிடற்றான்
றன்னைக், கூறேறக் கூறுமா வல்லான் றன்னைக் கோலவளைக்கை மாத
ராள் பாகன் றன்னை, நீறேறப் பூசும் அகலத் தானை நின்மலனை
றன்னை நிமலன் றன்னை, ஏறேறக் வேறுமா வல்லான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. ௬

குண்டாக்க னாயுழன்று கையி லுண்டு குவிமுலையார் தம்முன்னே
நாணமின்றி, உண்டியுகந் தமணே நின்றார் சொற்கேட் டுடன்றாகி யுழி
தந்தே னுணர்வொன் றின்றி, வண்டுலவு கொன்றையந் கண்ணி யானை
வானவர்க ளேத்தப் படுவான் றன்னை, எண்டிசைக்கும் மூர்த்தியாய்
நின்றான் றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே ௭

உறிமுடித்த குண்டிகைதங் கையிற் றூக்கி யூத்தைவாய்ச் சம
ணர்க்கோர் குண்டாக்க னாய்க், கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு
கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன், மறிதிரைநீர்ப் பவ்வநஞ்
சுண்டான் றன்னை மற்றொருகால் வல்வினையேன் நினைக்க மாட்
டேன், எறிகெடில நாடர் பெருமான் றன்னை யேழையே னான்பண்
டிகழ்ந்த வாறே ௮

நிறைவார்ந்த நீர்மையாய் நின்றான் றன்னை நெற்றிமேற் கண்
ணொன் றுடையான் றன்னை, மறையானை மாசொன்றி லாதான்
றன்னை வானவர்மேல் மலரடியை வைத்தான் றன்னைக், கறையானைக்
காதார் குழையான் றன்னைக் கட்டங்கம் ஏந்திய கையி னானை, இறை
யானை யெந்தை பெருமான் றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த
வாறே. ௯

தொல்லைவான் சூழ்வினைகள் சூழப் போந்து தூற்றியே னாற்
றியேன் சுடராய் நின்று, வல்லையே இடர்தீர்த்திங் கடிமை கொண்ட
வானவர்க்குந் தானவர்க்கும் பெருமான் றன்னைக், கொல்லைவாய்க்

